KALKI
2.3.2003
ரூ. 6.00

# கல்கி




ஞானக் கிறுக்கன்!

காப்பாற்றுவாரா?

உலகக் கோப்பை ஸ்பெஷல்

அனுபவியுங்கள் ஜீவா.
ஓர் ஆயுர்வேதிக் சோப்பு
27 மடங்கு
சிறப்பானது,
உங்கள் சருமம் புத்துயிர் பெற.

27

அனுபவியுங்கள் ஜீவா. உங்கள் சருமத்திற்கு உகந்த சோப்பு. ஜீவாவிலுள்ள 27 அத்தியாவசிய ஆயுர்வேத உட்பொருள்கள் சருமத்திற்கு ஊட்டமளித்து, மெருகூட்டி, பாதுகாக்கிறது. இதன் ஒப்பற்ற நுரை சரும துவாரங்களை திறப்பதோடு மட்டுமின்றி, இதில் நிறைந்த ஆயுர்வேத நற்குணங்கள் சருமத்தில் ஊடுருவிப் பாய்கிறது. எனவே உங்கள் சருமத்தில் இளமை, மென்மை மற்றும் பொலிவு பூத்துக் குலுங்குகிறது. மேலும் சருமத்திற்கு தருவதோ புத்துயிர்.

JEEVA™
The Complete Ayurvedic Soap

சருமம் புத்துயிர் பெறும்

உள்ளே...



# கல்கி

2.3.2003







ஞானக் கிறுக்கன்!

பக்.24

சிரிக்காட்டிப் போங்க!

பக். 56

ஏறு நூறு

பக். 20

பணம் காய்ச்சி மரம்!

பக்.4

# காப்பாற்றுவாரா?



• ராபின்சிங்

சச்சின் டெண்டுல்கர் களமிறங்கும் நான்காவது உலகக் கோப்பைப் போட்டி இது. இது ஒன்றும் அவருக்கு மட்டுமே உரித்தான பெருமை அல்ல. இந்திய அணியிலேயே கபில்தேவ், ஸ்ரீநாத் போன்றவர்களுக்கும் இதே சிறப்பு உண்டு.

சச்சினைப் பொறுத்தவரை உலகக் கோப்பைப் பந்தயம் என்பது பலவிதங்களில் ஸ்பெஷல்தான். தான் விளையாடிய முதல்





உலகக் கோப்பைப் போட்டியில் மூன்று முறை ஐம்பது ரன்கள் எடுத்தார். புதிய இளம் புயலாக இந்திய அணியில் அவர் இடம் பெற்றிருந்த சமயம் அது. அடுத்த உலகக் கோப்பையில் இரண்டு சதங்கள்! தான் களமிறங்கிய மூன்றாவது உலகக் கோப்பையில், ஐந்நூறு ரன்களைத் தாண்டினார். இவற்றில் கென்யா மற்றும் இலங்கைக்கு எதிராக தலா ஒரு சென்சுரி. சென்ற உலகக் கோப்பைப் பந்தயங்கள் நடந்து கொண்டிருந்த போதுதான் அந்தத் துயரச் செய்தி அவரை அடைந்தது. அவரது தந்தை இறந்த தகவல்தான் அது. அப்பாவின் இறுதிச் சடங்கு முடிந்த கையோடு மீண்டும் உலகக் கோப்பைப் பந்தயங்களில் ஆடினார். என்றாலும் கென்யாவுக்கு எதிரான ஆட்டத்தில் மட்டும்தான் பழைய சச்சினைப் பார்க்க முடிந்தது.

இதுவரை நடந்து முடிந்த உலகக் கோப்பைகளில் மார்க் வாஹ் மட்டும்தான் நான்கு சதங்களை எடுத்தவர். மூன்று சதம் எடுத்த மூவர் ரமீஸ் ராஜா, விவியன் ரிச்சர்ட்ஸ் மற்றும் சச்சின் டெண்டுல்கர் மட்டுமே. 1996 உலகக் கோப்பையில் இலங்கைக்கு எதிராக டெல்லியில் ஆடிய போது, சச்சின் அடித்த ஐந்து சிக்ஸர்களைத் தீவிர கிரிக்கெட் ரசிகர்கள் நிச்சயம் மறந்திருக்க மாட்டார்கள். ஜாவேத் மியான்டாடை விட்டு விட்டால், மிக அதிகமான ரன்களை (1059) உலகக் கோப்பைப் பந்தயங்களில் குவித்தது சச்சின் டெண்டுல்கர்தான்.

ஹாலந்து அணியோடு போராடித்தான் வெற்றி. ஆஸ்திரேலிய அணியோடு போராட்டம் என்பதே தெரியாத தோல்வி எனத் தொடங்கி, இந்திய ரசிகர்களைக் குமுற வைத்த இந்திய அணி, ஜிம்பாப்வேயோடு பெற்ற வெற்றியில்தான் ஓரளவு ஆறுதல் தேடிக் கொண்டிருக்கிறது.

பிரபல ஆல்ரவுண்டர்களில் ஒருவரான ராபின்சிங், "இருமுறை தென்னாப்பிரிக்காவில்



• பிரசாத்

விளையாடி பெரும்பாலும் தோல்விகளையே சந்தித்திருக்கிறது இந்திய அணி. எனக்கென்னவோ தென்னாப்பிரிக்கச் சூழல் மேற்கிந்திய அணிக்கு மிகவும் சாதகமாக இருக்கும் என்று தோன்றுகிறது'' என்கிறார். எனினும் சச்சின் டெண்டுல்கர் மீது அபார நம்பிக்கை இருக்கிறது இவருக்கு. "சச்சினை முதலில் களம் இறக்குவதுதான் புத்திசாலித்தனம் என்று படுகிறது. அவரை நான்காவதாக பேட் செய்ய இறக்கினால், ஒரு இயல்பான கிரிக்கெட் வீரரை முடக்கிப் போடுவது போல் தோன்றுகிறது. ஒன்று மட்டும் நிச்சயம் - இந்தியா வெல்ல வேண்டுமானால் சச்சின் துவக்க ஆட்டக்காரராக இருந்தே ஆக வேண்டும். மற்றபடி பெரிதாகக் கணிக்க முடியவில்லை. ஏனென்றால், ஒவ்வொரு அணியும் மிகவும் வித்தியாசமான எதிரிகளைச் சந்திக்க வேண்டியிருக்கிறது. தவறு செய்தால் சரிசெய்யும் வாய்ப்பில்லை. ஒரே அணியை அதே சுற்றுக்களில் மீண்டும் எதிர்கொள்ளப் போவதில்லை எனும் நிலை. ஒருவிதத்தில் கிரிக்கெட்டின் சுவாரஸ்யமே இதுதான்'' என்கிறார் ராபின்சிங்.

முன்னாள் கிரிக்கெட் வீரரான வெங்கடேஷ் பிரசாத், 'நியூசிலாந்து அணியுடன் மோதித் தோல்வி பெற்றவுடன் இந்திய கிரிக்கெட் வீரர்கள் விளையாட்டில் அதிக கவனம் செலுத்தியிருக்க வேண்டும். மாறாக மாடலிங்கில் தங்கள் முழு கவனத்தையும் செலுத்தினார்கள். விளம்பரங்களில் நடிப்பது தவறில்லை. ஆனால் கிரிக்கெட் பிராக்டிஸ் செய்வது அதைவிட முக்கியம் என்பதை இவர்கள் உணர்ந்திருக்க வேண் டாமா?'' என்று தன் குமுறலை வெளிப்படுத்தியிருக் கிறார்.

உணர்ந்திருக்க வேண்டும்தான் - சச்சின் உள்பட. என்றாலும் சமீபத்தில் ஜிம்பாப்வே அணியோடு மோதிய போது அவர் பெற்ற 81 ரன்கள் நம்பிக்கை அளிப்பதாகவே இருக்கிறது. இந்தப் போட்டியில் 46வது முறையாக ஆட்ட நாயகனாகத் தேர்வு பெற்றிருக்கிறார் சச்சின். வெறும் உலக கோப்பைப் பந்தயங்கள் என்று பார்த்தால் கூட, ஆறாவது முறை இத்தகைய பெருமையைப் பெற்றிருக்கிறார் அவர். மற்ற எவரையும் விட அதிக எண்ணிக்கையில் ஆட்டநாயகனாக உலகக் கோப்பைப் பந்தயங்களில் தேர்வு பெற்றவர் சச்சின் என்ற சாதனைக்கு உரியவராகியிருக்கிறார்.

முதலை காலைப் பற்றிய போது "ஆதிமூலமே" என்று கத்திய யானை போல, தோல்வி பயம் சூழ்ந்திருக்கும் இந்த வேளையில், இந்திய கிரிக்கெட் ரசிர்கள் "சச்சின் டெண்டுல்கரே" என்று கதறிக் கொண்டிருக்கிறார்கள்.

'பேட்'டைச் சக்கரமாகச் சுழற்றுவாரா சச்சின்?

— ஜி.எஸ்.எஸ்.

அட்டைப் படங்கள் (சச்சின்) : சாரி




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
**கி.ராஜேந்திரன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் :
**சீதா ரவி**

ஆசிரியர் குழு :
செ. ஏக்நாத் ராஜ்
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
2234 5622, 23, 24
தொலைநகல் :
044 - 2234 5621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkiweekly.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

Bharathan Publications Private Limited, Kalki Buildings, 47-NP, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு



பிப்ரவரி பதினொன்றாம் தேதி மாலை. ஆஸ்திரேலியா – பாகிஸ்தான் மோதிய உலகக் கோப்பை ஆட்டம்! அது உஷ்ணமான மோதல். "அவர்கள் சென்ற உலகக் கோப்பையைத் தட்டிச் சென்றிருக்கலாம்; ஆனால் எங்களை நினைத்தாலே அவர்களுக்கு நடுக்கம்தான்" என்று பாகிஸ்தான் வக்கார் யூனிஸ் மிகவும் கிண்டலாகவே பேட்டி கொடுத்திருந்தார். டாஸில் ஜெயித்து ஆஸ்திரேலியா முதலில் களம் இறங்கியது. 86 ரன்களுக்குள் முதல் நான்கு விக்கெட்டுகள் சரிந்து விட்டன. பாகிஸ்தான் அணி உற்சாகமாகத் தாக்குதலைத் தொடர்ந்தது. ஆஸ்திரேலிய ஆட்டக்காரர் சைமண்ட் பலமாக ஆடிக் கொண்டிருந்தார். அவர் சதம் அடிப்பாரா? ஆஸ்திரேலியா 250க்கு மேல் ரன்கள் எடுக்குமா? என்ற கேள்விகள் கிரிக்கெட் ரசிகர்களின் மனங்களை ஆக்ரமித்தன.



• மகேஷ்குமாரிடம் பரிசு பெறும் ஆய்வாளர் எட்வர்ட்

ஜோகன்னஸ்பெர்க்கிலிருந்து அப்படியே சென்னையில் 472, தங்கசாலைத் தெருவிற்கு வருவோம். இரண்டு தொலைக் காட்சிப் பெட்டிகளில் ஆட்டம் ஓடிக் கொண்டிருக்கிறது. அருகில் இரண்டு நபர்கள். நான்கு பி.எஸ்.என்.எல். டெலிபோன்கள், நான்கு செல்போன்கள், எல்லாத் தொலை பேசிகளும் சிணுங்கிக் கொண்டே இருக்கின்றன. "சைமண்ட் சதம் போடுவார் 5000 ரூபாய், ஆஸ்திரேலியா ஸ்கோர் 300ஐத் தொடும் 10,000 ரூபாய், அக்ரம் குறைந்தது நான்கு விக்கெட்டுகள் எடுப்பார், வைச்சுக்கோ 3000ரூபாய்." கருத்து சொன்ன ஆட்களின் பெயர்களும் விவரங்களும் பதிவு செய்யப்படுகின்றன. இந்தச் சுறுசுறுப்பில்

# பணம் காய்ச்சி மரம்!

அந்த வீட்டிற்குள் சந்தடியில்லாமல் நுழைந்த காவல்துறை அதிகாரிகள், இரு நபர்களின் கவனத்தைக் கவராததில் வியப்பில்லை.

திடீரென்று எதிரில் வந்து நின்ற காவல் துறையைப் பார்த்து அந்த இரண்டு பேரும் வியர்த்து விறுவிறுத்துத்தான் போனார்கள். சுற்றி வளைக்கப்பட்ட நிலையில், தப்பித்து ஓடுவதைப் பற்றி நினைத்துக் கூட பார்க்க முடியாது. கிரிக்கெட் சூதாட்டம் நடத்தியதற்காகப் பிடிபட்டவர்கள் விஜயகுமார் மற்றும் பரத்.

உலகக் கோப்பை துவங்கியதிலிருந்து ஜாம், ஜாமென்று சூதாட்டம் நடத்தி, லட்சக்கணக்கில் பணப் புரட்டல் செய்து வந்தவர்கள் மாட்டிக் கொண்டார்கள். டெலிவிஷன் பெட்டிகள் மற்றும் தொலைபேசிகள் பறிமுதல் செய்யப்பட்டன.

கிரிக்கெட் போட்டிகளின் போது இலவச இணைப்பாக,

உலகளாவிய சூதாட்டமும் களத்தில் குதித்து விடுகிறது. கிட்டத்தட்ட 250 கோடி ரூபாய்க்கு இந்தச் சூதாட்ட உலகில் பணம் புரளுவதாகச் சொல்கிறார்கள்.

சென்னை பூக்கடை ஏரியாவில் சூதாட்டக் கும்பல் மாட்டிக் கொண்டது இது இரண்டாவது முறை. சென்ற வருடம் செப்டெம்பர் மாதம் ஒன்பது பேர் பிடிபட்டார்கள். "கிரிக்கெட் ஒரு பணம் காய்ச்சி மரம். அதில் இந்தச் சூதாட்ட வளையத்தைப் புலனாய்ந்து கண்டு பிடிப்பது மிகச் சிரமமான ஒன்றுதான். காரணம், மிகுந்த நம்பிக்கையானவர்களைத் தொடர்பு கொண்டு, ரகசியமாகவே நடைபெறுகிறது இந்தச் சூதாட்டம். சென்ற





## பைத்தியம்தான்!

உலகக் கோப்பை போட்டி நடக்கும் மைதான காலரியில் ஒருவர், மற்றொருவரிடம் 'பக்கத்து சீட்டிற்கு யாராவது வருகிறார்களா?' எனக் கேட்டார்.
''இல்லை அது காலி தான்.''

''சரியான பைத்தியம். வேர்ல்ட் கப் மாட்சை யாராவது மிஸ் பண்ணுவாங்களா?

''அது என் மனைவியுடையது. என் கூட வருவதாக இருந்தது. ஆனால்.. அவ இறந்து போயிட்டா.''

''ஐயாம் ஸாரி... ரொம்ப வருத்தமாயிருக்கு. ஆனா நீங்க அந்த டிக்கட்ல உங்க நண்பர், உறவினர், பக்கத்து வீடுன்னு யாரையாவது அழைச்சுட்டு வந்திருக்கலாமே.''

''அட நீங்க வேற... அவங்க எல்லோருமே அவளோட இறுதி ஊர்வலத்துக்குப் போயிருக்காங்க.''

— லதா

செப்டெம்பர் அனுபவத்திற்குப் பிறகு, இந்த விஷயத்தில் நாங்கள் ஒரு கண்ணாகவே இருந்தோம். அதுவும் உலகக் கோப்பை துவங்கியதிலிருந்து, எங்கள் பார்வையை இன்னமும் தீவிரமாக்கினோம். ஆஸ்திரேலியாவும் பாகிஸ்தானும் மோதுவது ஒரு முக்கியமான ஆட்டமாதலால் கட்டாயம் சூதாட்டம் தன் முகத்தைக் காட்டும் என்பது தெரியும். அதே சமயத்தில் எங்களுக்கும் ரகசியத் தகவல் வர, கையும் களவுமாக மாட்டிக் கொண்டது சூதாட்டக் கும்பல். உலகக் கோப்பை முடியும் வரை எங்கள் நோட்டம் தொடரும்'' என்கிறார் பூக்கடை காவல் நிலைய ஆய்வாளர் எட்வர்ட். கிரிக்கெட் சூதாட்டத்தில் பிடிபடும் நபர்கள் மீது 'கேம்ப்ளிங் ஆக்ட்' சட்டத்தின் அடிப்படையில் மோசடி வழக்குப் பதிவு செய்யப்படுகிறது. கைது செய்யப்படுபவர்கள் உடனே சிறைக்கு அனுப்பப்பட்டாலும், நீதிமன்றம் மூலமாக ஜாமீனில் சுலபமாக வெளிவந்து விட முடியும். சென்ற செப்டெம்பரில் கைது செய்யப்பட்டவர்கள் வழக்கின் முடிவில் 2,500 ரூபாய் அபராதம் கட்டி விடுதலை பெற்று விட்டார்கள்! 'கேம்ப்ளிங் ஆக்ட்' சட்டத்தின் அடிப்படையில் கைது செய்யப்படுவதால் கடுமையான தண்டனைக்கு இடமில்லை. யாராவது எங்களிடம் 'ஏமாற்றப்பட்டு விட்டோம்' என்று எழுத்துப்பூர்வமாக புகார் கொடுத்தால், தண்டனையைக் கொஞ்சம் அதிகப்படுத்தலாம்' என்கிறார்கள் காவல்துறை அதிகாரிகள். ''இந்தச் சூதாட்டம் உலக அளவில் நடந்தாலும் எங்கள் புலனாய்வின்படி, சென்னைக்கும் வேறு ஊர்களில் நடக்கும் சூதாட்டத்துக்கும் தொடர்பில்லை. இப்போது தொலைபேசிகளைப் பயன்படுத்தாமல் செல்லுலார் ஃபோன்களை மட்டுமே பயன்படுத்துவதாகச் சொல்கிறார்கள். எங்கள் கண்காணிப்பைத் தீவிரமாக்கியிருக்கிறோம்'' என்கிறார் சூதாட்ட கும்பலைப் பிடித்த மகேஷ்குமார் அகர்வால்.

இந்தச் சூதாட்டம் எப்படி நடக்கிறது? இந்தியாவும் ஆஸ்திரேலியாவும் மோதிய ஆட்டத்தை எடுத்துக் கொள்வோம். பொதுவான எதிர்பார்ப்பு என்ன? இந்தியா கட்டாயம் 250க்கு மேல் ரன் எடுக்கும்; வெற்றி அடையும் என்பதுதானே! ஆனால் அன்று நடந்தது என்ன? இந்தியா எடுத்த ரன் 125தான். அன்று சூதாட்ட கும்பலுக்கு நல்ல லாபம்! ஏனென்றால் நமது அணியை நம்பி, பெரும்பாலோர் 250க்கு மேல் அடிப்போம் என்று பெட் கட்டியிருந்தார்கள். ''இந்தியா ஜெயிக்கும்'' என்று பெட் கட்டுவது இப்போது ஆபத்தான ஒன்று என சூதாட்ட வட்டாரத்தில் சொல்கிறார்கள். சூதாட்டத்தில் வென்றவர்களுக்குப் பணப் பட்டுவாடா அடுத்த நாள்தான். மேலும் பெட்டிங் முழுக்கத் தொலைபேசியில் தான் நடக்கிறது.

இப்போது சூதாட்ட வட்டாரத்தில் அதிக அளவில் பெட் கட்டப்பட்டு வரும் விவகாரம் 'சூப்பர் ஸிக்ஸில் இடம் பெறப் போகும் நாடுகள் எவை? அரையிறுதிச் சுற்றுக்கு எந்த அணிகள் வரும்? இறுதிச் சாம்பியன் யார்?' இந்தக் கேள்விகளுக்கான பதில்களில் கோடிக்கணக்கான பணம் பரவி இருக்கிறது.

''இந்தியாவில்தான் இந்த கிரிக்கெட் சூதாட்டம் சட்ட விரோதமானது; பெரும்பாலான வெளிநாடுகளில் சட்டம் இதை அனுமதிக்கிறது'' என்கிறார்கள் வழக்கறிஞர்கள். ''இதைத் தடை செய்வதற்கு பதிலாக சட்டபூர்வமாகவே அனுமதித்தால் அரசுக்கும் வருமானம் வரும்'' என்கிறார்கள் அவர்கள்! சூதாட்டத்தில் கோடிகள் புரள்வது தொடர்கிறது!

— ப்ரியன்

# ஜிம்பாப்வேயில் என்னதான் பிரச்னை?

இங்கிலாந்து அணி ஜிம்பாப்வேயில் ஆட மறுத்துவிட்டது. இதன் காரணமாக ஜிம்பாப்வேக்கு ஆடாமலேயே நான்கு பாயிண்ட்! ஒரு மாதத்துக்கு முன்பே இங்கிலாந்து அணியின் கேப்டன் நாஸர் உசேன் தெளிவாகக் குறிப்பிட்டுவிட்டார், ஜிம்பாப்வே அதிபர் முகபேவுடன் தாம் கைகுலுக்கத் தயாராக இல்லை என்று. காரணம்? ஜிம்பாப்வேயில் நடப்பதை ஜனநாயக ஆட்சி என்று கூற முடியாது. பேச்சுரிமை அங்கு முடக்கப்பட்டிருக்கிறது - இதைத்தான் காரணமாகக் குறிப்பிட்டிருக்கிறது இங்கிலாந்து அணி. கொசுறாக "எங்கள் அணிக்கு அங்கு பாதுகாப்பு இல்லை" என்றும் கூறுகிறது.



அப்படி என்ன நடந்து வருகிறது ஜிம்பாப்வேயில்? முகபே செய்துவிட்ட கொடூரங்கள்தான் என்ன?

பிரிட்டனிடமிருந்து (தெற்கு ரொடீஷியா என்று முன்பு அழைக்கப்பட்ட) ஜிம்பாப்வே ஒருவழியாக விடுதலை பெற்றது. அப்போதே ஆட்சியைப் பிடித்தவர் ராபர்ட் முகபே. சீக்கிரமே அத்தனைச் சட்டங்களையும் புறக்கணித்துவிட்டு சர்வாதிகாரியாகச் செயல்படத் தொடங்கினார். இவருக்கெதிரான முறையில் எந்தப் பத்திரிகையாவது எழுதினால் அவ்வளவுதான், பத்திரிகை அலுவலகம் தீயிடப்படும். சம்பந்தப்பட்ட பத்திரிகையாளர்கள் சித்ரவதைக்கு ஆளாவார்கள். அண்டை நாடான காங்கோவின் அதிபர் கபிலாவுக்கு இவர் செய்த ராணுவ உதவிகள் கடும் விமர்சனங்களுக்கு உள்ளாயின. காரணம் ஏற்கெனவே பொருளாதாரச் சீரழிவைச் சந்தித்து வந்த ஜிம்பாப்வேயை, இந்தச் செயல் மேலும் வேகமான வீழ்ச்சிக்கு உள்ளாக்கியது.

இன்றைய தேதியில் உலகிலேயே அதிக அளவில் மக்கள் எய்ட்ஸ் நோயால் பாதிக்கப்பட்டிருப்பது ஜிம்பாப்வேயில்தான். பதினைந்திலிருந்து ஐம்பது வயதுக்குட்பட்ட பிரிவினரில், நான்குபேரில் ஒருவரின் உடலில் ஹெச்.ஐ.வி.

இங்கிலாந்து வீரர்கள் இருக்கட்டும்,

• ஒலோங்கா



• நாஸர் உசேன்

ஜிம்பாப்வே அணியைச் சேர்ந்த ஹென்றி ஒலோங்கா மற்றும் ஆன்டி ஃப்ளவர் ஆகியோர் கூட கையில் கறுப்புப் பட்டை அணிந்து கொண்டு ஆடினார்கள். முகபேயின் ஆட்சியில் நடக்கும் கொடுமைகளுக்கெதிராக இப்படி அணிந்ததாக அவர்கள் கூற, ஜிம்பாப்வேயில் பெரும் பரபரப்பு.

அரசியல் எப்படியிருந்தாலும் விளை

யாட்டில் அதைக் கலப்பது வடிகட்டிய முட்டாள்தனம் மற்றும் சுயநலம் என்று எண்ணுபவர்களின் எண்ணிக்கை அதிகமாகி வருகிறது.

ஒலோங்கா ஒரு தேங்காய் என்று வர்ணித்தனர் சிலர். வெளியே பழுப்பாகவும் உள்ளே வெள்ளையாகவும் இருக்கிறாராம் - அதாவது கறுப்பு இனத்தவராக இருந்தும் வெள்ளை இனத்தவருக்கு ஆதரவான நிலையை எடுத்திருக்கிறார் என்கின்றனர். 'அவருக்குத் தெரிந்த விளையாட்டில் (கிரிக்கெட்) கவனம் செலுத்துவது நல்லது. தெரியாத விளையாட்டில் (அரசியல்) அவர் யாருடைய தூண்டுதலாலோ (பிரிட்டிஷ் அரசின்) நடந்து கொள்வது சரியில்லை' என்று எச்சரித்திருக்கிறார் ஒரு விளையாட்டு விமர்சகர்.

ஒரு காலத்தில் வெள்ளையர் மட்டுமே ஆதிக்கம் செலுத்தி வந்த கிரிக்கெட்டில், முகபே ஆட்சியினால்தான் மாற்றம் ஏற்பட்டது என்றும், முகபேவின் கட்டாயம் இல்லையென்றால், ஒலோங்கா போன்றவர்கள் ஒரு போதும் ஜிம்பாப்வே கிரிக்கெட் அணியில் இடம் பிடித்திருக்க முடியாது என்றும் கூறுபவர்கள் உண்டு.



இங்கிலாந்தின் பிரபல இதழான "கார்டியன்", 'ஜிம்பாப்வே கிரிக்கெட் என்பது அங்குள்ள கொடுங்கோல் ஆட்சியுடன் எந்தவிதத்திலும் சம்பந்தமில்லாதது. பல்வேறு இனத்தவர் இடம் பெறும் ஓர் அணி கடுமையாக உழைத்து முன்னுக்கு வந்திருக்கிறது. முகபேவின் ஆட்சி கொஞ்ச காலத்தில் மறைந்து விடலாம். ஆனால் கடுமையாக உழைத்து முன்னுக்கு வந்திருக்கும் ஜிம்பாப்வே கிரிக்கெட் அணியை நாம் எந்த விதத்திலும் முடக்கிவிடக் கூடாது'' என்றிருக்கிறது.

அதே சமயம் ஜிம்பாப்வேக்கு எதிரான கடுமையான குரல்களும் கேட்கத் தொடங்கியிருக்கின்றன. எழுபதுகளில் "இன வெறிக் கொள்கை கொண்ட தென்னாப்பிரிக்காவுடன் எந்த நாடும் விளையாடக் கூடாது" என்ற இயக்கத்துக்குத் தலைமை தாங்கினார் பீட்டர் ஹெய்ன் என்பவர். அவர் சமீபத்தில் "பெர்லின் ஒலிம்பிக்ஸை 1936ல் நடத்த ஒத்துக் கொண்டது ஹிட்லரின் பிரச்சார பலத்துக்கு ஒரு பெரிய வெற்றியாக சுட்டிக் காட்டப்பட்டது. அதே போன்ற ஒரு தவறை நாம் இப்போது செய்யக் கூடாது. உலக அணிகளுடன் புன்னகையுடன் ராபர்ட் முகபேயைக் காட்சி தர வைப்பது ஹிட்லருக்கு அளித்த அனுமதிக்கு ஒப்பாகும்'' என்று பேசியிருக்கிறார்.

முகபே, இங்கிலாந்துக்கெதிராக வெளிப்படையாகப் பேசவில்லை. ஆனால் தங்களுக்கும் கென்யாவுக்கும் எதிராக அவ்வப்போது கருத்து கூறிக் கொண்டிருக்கும் ஆஸ்திரேலிய அணியைப் பற்றி, தமது ஜாம்பியா விஜயத்தில் விளாசியிருக்கிறார். "கடும் குற்றவாளிகளை ஆஸ்திரேலியாவுக்கு அனுப்பிவிடுவது ஒரு காலத்தில் பல நாடுகளின் வழக்கமாகவே இருந்து வந்தது. எனவே அவர்கள் இப்படிப் பேசுவதில் எனக்கு எந்த வியப்பும் இல்லை" என்கிறார்.

- ஆதர்ஷ்



* ஆண்டி ஃப்ளவர் கையில் கறுப்புத் துணி



# அடி உதவுமா?

கரோலின் டாஃபோடில்... 'எங்கேயோ கேட்ட பெயர்' என்கிறீர்களா..? புனித தோமையர் பள்ளி மாணவி பானுப்ரியாவின் பெயரைப் போல், ஜெயகோபால் கரோடியா பள்ளி மாணவியான கரோலின் டாஃபோடில்லின் பெயரும் நமக்கு மறந்து தான் போய்விடும்.

ஆனால் பள்ளியில் ஆசிரியரிடம் அடி வாங்கி, படுகாயமுற்ற இந்த இரண்டு பெண் குழந்தைகளும் ஆயுட் காலத்துக்கும் மறக்கமாட்டார்கள் – கை முறிந்து போனதையும், கழுத்தில் அடிபட்டு மயங்கி விழுந்ததையும், அவர்களால் மறக்க முடியாது; சக மாணவ – மாணவியர் முன் சிறுமைப்பட்டு, கூனிக் குறுகியதையும் அவர்களால் மறக்க முடியாது; பாதுகாப்பும் அரவணைப்பும் அளிக்க வேண்டிய கல்விச் சூழலில், அங்கீகரிக்கப்பட்ட வன்முறைக்குத் தாங்கள் ஆளானதையும் அவர்களால் சுத்தமாய் மறக்க முடியாது.

பள்ளிக் குழந்தைகளை ஆசிரியர்கள் அடிப்பது புதிதல்ல. தினந்தோறும் நடக்கும் இந்தக் கொடுமைக்குச் சட்டம் பாதுகாப்பு அளிக்கிறது. பள்ளிகளில் 'கார்பரல் பனிஷ்மெண்ட்' எனப்படும் தண்டப் பிரயோகம் செய்ய சட்டப்படி அனுமதி உண்டு! ஆசிரியர்கள் அடித்துக் 'கண்டிக்காத' அல்லது 'திருத்தாத' பிள்ளைகளை 'அடிங்க' என்று நேரில் வந்து கேட்டுக் கொள்ளும் பெற்றோர்களும் உண்டு.

ஆனால் இந்தத் 'தண்டனை' எதை சாதிக்கிறது...? அடிப்பதன் மூலம் திருத்த முடியுமா?

பள்ளிகளில் ஒழுக்கம் கற்றுத் தருகிறேன் பேர்வழி என்று மாணவ – மாணவிகள் பேரில் வன்முறைத் தாக்குதல் நடத்துவது எவ்வாறு சரியாகும்?

தவறு செய்யும் குழந்தைகளைத் தண்டிக்க வரையறுக்கப்பட்ட விதிகள் வேண்டாமா?

அடி, உதை போன்ற வன்முறைப் பிரயோகங்கள் ஏற்படுத்தும் உளவியல் ரீதியான பாதிப்புகள், குழந்தைகளின் ஒழுக்கத்தையும் நற்பண்புகளையும் வளர்ப்பதற்குப் பதில், மனத்தாங்கலையும் மனக் கசப்பையும் ஏற்படுத்தாதா?

ஒன்பது வயதில் பள்ளியில் வாங்கிய அடியின் வலியையோ அவமானத்தையோ, இருபத்தொன்பது ஆண்டுகள் ஆன பிறகும் நம்மால் மறக்க முடிகிறதா?

குழந்தைகளை அடித்துத் திருத்துவது சரி என்று கருதி தொடையில் சூடு போடும் பெற்றோர்களிடமும், காதைத் திருகும் ஆசிரியர்களிடமும் யார் நியாயம் கேட்பது? பாதுகாப்பற்ற பிஞ்சுகள் மீது தங்கள் பலத்தைக் காட்டும் இவர்களை யார் தண்டிப்பது?

தொலைக்காட்சியில் வன்முறை, சினிமாவில் வன்முறை என்று புலம்பும் நாம், நமது வாழ்க்கையில் மட்டும் இந்த வன்முறையை ஏன் அனுமதிக்கிறோம்? சமுதாயத்தின் பல நிலைகளில் தென்படும் வன்முறையும் குரூரமும் நாம் நமது குழந்தைகள் பேரில் நிகழ்த்தும் வன்முறையின் பிரதிபலிப்பாகத் தோன்றவில்லையா...?

'அடி உதவுமா?' என்பது குறித்த ஆத்ம பரிசோதனையை நாம் உடனே தொடங்க வேண்டும். பெற்றோர், கல்வியாளர்கள், மருத்துவர்கள், மனவியல் வல்லுனர்கள்... அனைவரது சிந்தனையும் அனுபவமும் குவிந்து, குழந்தைகளுக்குப் பாதுகாப்புத் தரவேண்டும், இல்லங்களும் பள்ளிகளும் அவர்கள் மகிழ்ந்து குலாவும் இருப்பிடங்களாக மாற வேண்டும். நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்...? எழுதிப் போடுங்களேன்!

– ஆசிரியர் குழு





# குங்குமம்

14.03.03

**மகளிர் தினச்**
**சிறப்பிதழில்**



கவிதை நடையில்

## கலைஞர்

எழுதும்

## கார்க்கியின் 'தாய்' காவியம் ஆரம்பம்

உலகின்
அத்தனை
மனித
உள்ளங்களையும்
கொள்ளை கொண்ட
புதினம்.

படிக்கத் தவறாதீர்கள்!

■ உங்கள் பிரதிக்கு இன்றே சொல்லி வையுங்கள்

இந்தாங்க பணம்

இந்தாங்க வாக்குறுதிகள்

புடியுங்க பரிசுப் பொருள்கள்

அதெல்லாம் போதாது இதைப் புடிங்க வெளுத்துக் கட்டிடலாம்...

## தோற்றுப்போன தேர்தல் கமிஷன்!

கைப்புண்ணுக்குக் கண்ணாடி தேட வேண்டிய அவசியமென்ன...? 'சாத்தான்குளம் தொகுதிப் பெண்கள் பரிசாகப் பெற்றுள்ள பாலியெஸ்டர் சேலைகள், அ.தி.மு.கவினர் வினியோகித்தவைதான் என்பதற்கு ஆதாரம் இல்லையே?' என்று தேர்தல் கமிஷன் தட்டுத் தடுமாறிக் கொண்டிருப்பது நகைப்புக்கிடமாக இருக்கிறது.

அ.தி.மு.கவைக் காட்டிக் கொடுக்க விரும்பாத ஒரு சில பெண்கள், சேலைகளைத் தாங்களே வாங்கிக் கொண்டதாகச் சொல்லியிருக்கிறார்கள்; ஆனால் சேலைகளை மட்டுமின்றி, இன்னும் பல பொருள்களையும் அ.தி.மு.க. வினியோகித்து, வாக்காளர்களுக்கு ஆசை காட்டியிருக்கிறது என்ற ஆதார பூர்வமான செய்தி, தொலைக்காட்சியிலும், கண்ணியமிக்க தேசிய நாளிதழ்களிலும் வெளி வந்துள்ளது.

தேர்தல் கமிஷன் தேர்தலை நடத்தினால் போதாது. தேர்தல் நேர்மையான விதத்தில் நடைபெற முழு முயற்சியையும் மேற்கொள்ள வேண்டும். இவ்விஷயத்தில் தேர்தல் ஆணையம் சாத்தான்குளம் இடைத்தேர்தலைப் பொறுத்த மட்டில், ஆரம்பத்திலிருந்தே மிகவும் அலட்சியப் போக்குடன் நடந்து கொண்டிருக்கிறது.

முதல்வரும் அ.தி.மு.க. தலைவருமான ஜெயலலிதாவின் பிரசாரம் மட்டுமே போதும், இந்தத் தேர்தல் முற்றிலும் நியாயமற்ற முறையில் நடத்தப்படுகிறது என்பதை உறுதி செய்ய.



**கல்கி**



2003 மார்ச் 2
சித்ரபானு மாசி 18
மலர் : 61
இதழ் : 31






ஆண்டிப்பட்டியை அரசிப்பட்டியாக்கியது போல், சாத்தான்குளத்தை தேவகுளமாக மாற்றிக் காட்டுவதாக ஜெயலலிதா பேசியிருப்பது தேர்தல் விதிமுறைகளுக்கும் ஜனநாயக மரபுகளுக்கும் விரோதமானது. வாக்காளர்களுக்கு நேரடியாகப் பரிசுப் பொருள்களை வழங்கியது போதாது என்று, தேர்தலில் அ.தி.மு.க. வேட்பாளரை வெற்றி பெறச் செய்த பிறகும் பரிசு காத்திருக்கிறது என்று லஞ்ச அறிவிப்பு செய்ததாகிறது. போதும் போதாததற்கு, இதுநாள் வரை அத்தொகுதியில் ஆளுங்கட்சி எம்.எல்.ஏ இல்லாததால்தான் அது முன்னேறவில்லை என்றும், அ.தி.மு.க. வேட்பாளர் எம்.எல்.ஏ.வானால் எல்லாக் குறைகளும் நீங்கிவிடும் என்றும் ஒரு முதல்வர் எவ்வாறு பேசலாச்சு! தமது கட்சியைச் சேராத எம்.எல்.ஏக்களால் அரசுப் பணிகளை எத்தொகுதியிலும் நிறைவேற்ற முடியாது என்ற தீர்மானத்துடன் அல்லவா அவர் பேசுகிறார்!

அ.தி.மு.க. நீங்கலாக வேறு யாருக்கு வாக்களித்தாலும் தண்டனைதான் என்று மறைமுகமாக வாக்காளர்களை மிரட்டுகிற இந்தப் பிரசாரம் பிரசாரமே அல்ல; இது அச்சுறுத்தல்! 'கட்சிதான் ஆட்சி, ஆட்சியே கட்சி' என்கிற ஃபாஸிஸப் போக்கை அடிக்கோடிட்டு வருகிறார் முதல்வர். ஆட்சியில் அமர்ந்த பிறகு, தமது கட்சிக்கு எதிராக வாக்களித்தவரையும் சமமாக நடத்தவேண்டும் என்கிற ஜனநாயக தத்துவம் அடியோடு முறியடிக்கப்பட்டுள்ளது.

அ.தி.மு.க. அமைச்சர்களோ தொகுதிக்குள் அங்கங்கே முகாமிட்டு, 'கோயில் புனருத்தாரணமா – இந்தா பிடி பணத்தை; சாலை போட வேண்டுமா?... இதோ செய்து தருகிறோம்; சுய உதவிக் குழுவுக்குக் கட்டடம் வேண்டுமா, சூ மந்திரக்காளி, இதோ கட்டியாகிவிட்டது!' என்று பணமென்னும் மந்திரக் கோலை வீசி மக்களை வீழ்த்திக் கொண்டிருக்கிறார்கள். இந்த அளவுக்குப் பகிரங்கமாகத் தேர்தல் விதிகள் இதுவரை தமிழகத்தில் மீறப்பட்டதில்லை.

எதிர்க்கட்சியினர் சுட்டிக் காட்டி மனு செய்வதற்கு முன்னரே, தார்மிக அடிப்படையில் தேர்தல் கமிஷன் தலையிட்டு, அ.தி.மு.க.வின் அக்கிரமங்களைத் தட்டிக் கேட்டுத் தடுத்து நிறுத்தியிருக்க




வேண்டும். ஆனால், அமைச்சர்களும் கட்சிக்காரர்களும் தொகுதிக்குள்ளே ஆட்டம் போடுவதைப் பத்திரிகைகள் ஆரம்பக் கட்டத்திலேயே சுட்டிக் காட்டியும், கமிஷன் ஏதும் செய்யாதிருந்து விட்டது.

இப்போது எதிர்க்கட்சியான காங்கிரஸ் புகார் செய்ததன் பெயரில் ஒவ்வொரு குற்றச்சாட்டாக ஆராய்ந்து, மெள்ள எடைபோட்டு வருகிறது கமிஷன். கிராம நிர்வாக அதிகாரிகள் தரும் சான்றிதழ்கள் மற்றும் குடிசை மாற்று வாரிய சான்றிதழ்களை, வாக்காளர் அடையாளச் சின்னமாக ஏற்கத் தடை விதித்திருக்கிறது. இந்த இரண்டு ஆவணங்களும் போலி வாக்காளர்களை உருவாக்கி அனுமதிப் பதற்காகச் சகட்டு மேனிக்கு ஆளுங்கட்சியால் வினியோகிக்கப்பட்டிருப்பது, இதன் மூலம் ஊர்ஜித மாகிறது.

அதிகார துஷ்பிரயோகம் மட்டுமின்றி, அப்பட்டமான தவறுகளை அ.தி.மு.க. இந்த இடைத் தேர்தல் பிரசாரத்தில் இழைத்திருக்கிறது என்பதைத் தேர்தல் கமிஷன் அறிவித்துக் கண்டனம் செய்வதோடு, நடவடிக்கையும் எடுத்தாக வேண்டும். இல்லையேல், ஜெயலலிதா, அரசு யந்திரத்தைப் பயன்படுத்திய முற்றிலும் தவறான போக்கும், மக்களுக்கு ஆசை காட்டுகிற பிரசாரப் பாணியும், லஞ்ச லாவண் யங்களால் வாக்கு சேகரிக்கும் வக்கிரமும், வியாதி போல் பரவி நாடெங்கும் நடைமுறையாகி விடும். ஆளும் கட்சிகளுக்கு மட்டுமே தேர்தல் சாதகமாக அமையும் என்ற நிலை உறுதிப்படும்.

இத்தனையையும் மீறி ஒருவேளை காங்கிரஸ் இத்தேர்தலில் வெற்றி பெறலாம்; அல்லது வெற்றி பெறாமலும் போகலாம். ஆனால், தேர்தல் கமிஷன் தோற்றுவிடக் கூடாது – தனது கடமையில் தவறிவிடக் கூடாது. தேர்தல் நன்னடத்தை விதிகள் மீறப்பட்டதால் அ.தி.மு.க. வேட்பாளர் தேர்தலில் நிற்கத் தகுதி இழக்கிறார் என்று அறிவிக்காவிட்டாலும், தேர்தலை ஒத்திவைப்பதாகவாவது அறிவிக்கவேண்டும்.

ஜெயலலிதாவைப் போல் அல்லாது, தேர்தல் கமிஷன் தன் அதிகாரத்தை நியாயமான முறையில் பயன்படுத்தட்டும். ○

"உலகக் கோப்பைப் போட்டியின் இறுதிப் போட்டியைவிட இந்தியா - பாகிஸ்தான் மேட்ச்தான் படு திரில்லிங். பல வருடங்களுக்குப் பிறகு நடக்கிற இந்த மேட்ச்சை தென் ஆப்பிரிக்கா சென்று நேரில் பார்க்கிற வாய்ப்பு கிடைத்திருப்பது எங்கள் அதிர்ஷ்டம்'' என்கிறார்கள் சென்னையைச் சேர்ந்த பள்ளி மாணவர்களான அபினவ் முகுந்த், ஆர்.எம். கார்த்திக்.

"இவர்களுக்கு எப்படி இந்த வாய்ப்புக் கிடைத்தது?''

ஸ்பினாஷ் டீ.வி. சேனலும், நியூட்ரின் நிறுவனமும் இணைந்து, சென்னையில் பள்ளி மாணவர்களுக்கிடையில் ஒரு கிரிக்கெட் போட்டி நடத்தியது. பதினாறு பள்ளிகளின் டீம்கள் கலந்து கொண்ட இந்த டோர்னமெண்ட்டில் ஆடிய மாணவர்களில், இரண்டு சிறந்த கிரிக்கெட்டர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர். அந்தச் சிறந்த கிரிக்கெட்டர்கள்தான் இவர்கள். (வருங்கால சச்சின், சேவாக்?) இவர்களுக்கு இலவசமாக தென் ஆப்பிரிக்கா சென்று, இந்தியா - பாகிஸ்தான் மேட்ச் பார்க்கும் வாய்ப்பை வழங்கியுள்ளது நியூட்ரின்.

''மூன்றாம் வகுப்பு படிக்கிறபோது நான் கிரிக்கெட் விளையாட ஆரம்பித்தேன். அப்பாவுக்கு ஐ.ஓ.பி. யில் வேலை. அவரும் 'மாநில அளவில் பிரபலமான கிரிக்கெட்டர். தாத்தா, அந்தக் காலத்தில் சட்டக் கல்லூரி கிரிக்கெட் கேப்டன். பெற்றோர்களின் ஊக்கத்தால் பதிமூன்று வயதுக்குட்பட்டோர் அணி, பதினான்கு வயதுக்குட்பட்டோர் அணி என்று தொடர்ந்து இடம் பெற்று, ஆடி வருகிறேன். நான் படிக்கும் செயின்ட் பீட்ஸ் பள்ளியில் எனக்கு நிறைய ஊக்கம் அளிக்கிறார்கள். தொடர்ந்து கிரிக்கெட் ஆடுவதால், எனக்கென்று தனியாய் பரீட்சை நடத்துவார்கள். நான் நன்றாகப் படிப்பேன். எண்பதுக்குக் குறையாமல் மார்க் வாங்கி விடுவேன். இந்திய கிரிக்கெட் அணியில் இடம் பெறுவது தான் என் லட்சியம்!'' என்கிறார் முகுந்த்.

"சாந்தோம் உயர்நிலைப் பள்ளியில் பத்தாம் வகுப்பு படிக்கிறேன். என் அப்பா ஏழை மாணவர்களுக்கு கிரிக்கெட் கோச்சிங் தருகிறார். எனக்குச் சிறு வயதிலிருந்தே கிரிக்கெட் என்றால் உயிர். என் பெரியப்பா, சித்தப்பாக்கள் அந்தக் காலத்தில் சென்னையில் நடந்த டெஸ்ட் மேட்ச்களைச் சென்று பார்த்த அனுபவங்களைக் கதை கதையாய்ச் சொல்லி, எனக்கு ஆர்வம் ஊட்டினார்கள். என் கிரிக்கெட் திறமைக்காக ஏற்கெனவே எனக்கு ஸ்காலர்ஷிப் தரப்படுகிறது. தென் ஆப்பிரிக்கா பயணத்துக்காக, நான் பாஸ்போர்ட்டுக்கு விண்ணப்பித்து, அது கைக்கு வந்து சேர்வதற்குள் பட்ட கஷ்டமும், அடைந்த டென்ஷனும் இருக்கிறதே! அப்பப்பா!'' என்கிறார் கார்த்திக்.

இரண்டு 'விட்டில் கிரிக்கெட்டர்களும் பைனாகுலர், ஆட்டோகிராப் புத்தகம், கேமரா என்று பேக் பண்ணிக் கொண்டு, தென் ஆப்பிரிக்காவுக்குப் பறக்கத் தயாராகிவிட்டார்கள்.

**- எஸ். சந்திரமெளலி**



• ஸ்ரீகாந்துடன் முகுந்த், கார்த்திக்

# பாய்ஸ்!



# மலையளவு மாற்றங்கள்!

ஏழாவது உலகக் கோப்பை என்றாலும் முந்தைய உலகக் கோப்பைப் பந்தயங்களிலிருந்து ஒப்பிடும் போது இப்போதைய பந்தயங்களில் இமய மலையளவு மாற்றங்கள்!

முக்கியமாக, போதை மருந்தைப் பயன்படுத்தினால் என்னவாகும் தெரியுமா? என்ற கண்டிப்பு விதி. எந்த கிரிக்கெட் வீரராவது போதை மருந்து உட்கொண்டதாகச் சிறுநீர்ப் பரிசோதனையில் தெரியவந்தால், அவர் இந்த உலகக் கோப்பையின் பிற பந்தயங்களில் பங்கேற்க முடியாது. (வார்னேவுக்கு நேர்ந்த கதி!) இந்தச் சோதனைக்குத் தன்னை உட்படுத்திக் கொள்ள யாராவது மறுத்தாலும் இதே தண்டனைதான். அவ்வளவு ஏன், தடை செய்யப்பட்ட போதை மருந்தை (தாம் உட்கொள்ளாமல்) பிற கிரிக்கெட் வீரர்களுக்கு அளித்தாலோ, சிபாரிசு செய்தாலோகூட, இதே தண்டனை உண்டு. மேற்படி குற்றங்கள் உறுதி செய்யப்பட்டால் தொடர்ந்து விளையாடத் தடை என்ற தண்டனையை இதற்கான குழு வழங்கும்.



* சென்ற உலகக் கோப்பைப் பந்தயத்தை விட இம்முறை பரிசுத் தொகை எக்கச்சக்கம். முதல் உலகக் கோப்பையில் வெற்றி பெற்ற அணிக்கு நான்காயிரம் பவுண்டுகள் தான். ஆனால் இப்போதைய பரிசுத் தொகையோ, இரண்டு மில்லியன் டாலர்கள். அதாவது ஏழாயிரம் சதவிகித உயர்வு. சூப்பர் சிக்ஸில் இடம் பெறும் எந்த அணியும் தான் ஆடும் அத்தனை போட்டிகளிலும் தோற்றால் கூட ஒவ்வொரு போட்டிக்கும் குறைந்தது முப்பதாயிரம் டாலர்கள் பெற்றுக் கொள்ளும். போனஸ் தொகை வேறு.

* போட்டிகளில் அரசியல் கலப்பு என்பதும் மிக அதிகமாயிருக்கிறது. பேச்சுரிமையே இல்லாத நாடு ஜிம்பாப்வே என்பதும், அமெரிக்கத் தூதரகங்களில் அணுகுண்டு வெடித்த நாடு கென்யா என்பதும் பல சர்ச்சைகளுக்கு இடமளித்துள்ளன.

விளம்பரங்களின் ஆதிக்கமும் உச்சத்தைத் தொட்டிருக்கிறது. 1996 உலகக் கோப்பையின் ஸ்பான்ஸராக கோக்கோ கோலா இடம் பெற்ற போது "There is nothing official about this" என்று கோக்கோ கோலாவை நக்கல் செய்த விளம்பரங்களை பெப்ஸியால் தாராளமாகவே போட்டிகளுக்கு நடுவே ஒளிபரப்ப முடிந்தது. ஆனால் இப்போதைய நிலை வேறு. உதாரணமாக "சவுத் ஆஃப்ரிகன் ஏர்வேஸ்" என்னும் விமான சர்வீஸ்தான் இந்த உலகக் கோப்பைப் பந்தயங்களின் அதிகார பூர்வமான விமான ஏஜென்ஸி என்பதால், மற்றொரு விமான ஏஜென்ஸியான "சஹாரா"வின் லோகோவை கிரிக்கெட் வீரர்கள் அணிவது முற்றிலுமாகத் தடை செய்யப்பட்டிருக்கிறது.

* முன்பெல்லாம் உலகக் கோப்பைப் பந்தயங்களின் துவக்க விழா ஆடம்பரமில்லாமல் இருந்தது. முடிவடையும் விழா என்ற ஒன்றே கிடையாது. ஆனால் இந்த முறை அது உண்டு. ஒலிம்பிக் விழாத் தரத்தில் தென்னாப்பிரிக்காவில் துவக்க விழா நடைபெற்றிருக்கிறது. தலைசிறந்த அமெரிக்க இசைக் கலைஞர்களும், தென்னாப்பிரிக்காவின் பிரபல நாடகக் கலைஞர்களும் கைகோத்து பிரம்மாண்டமான பொருட்செலவில் இதை நடத்தியிருக்கிறார்கள்.

— ஆதர்ஷ்



# ஸ்ரீ டிராவல்ஸ்

194 - a. முதல் மாடி, அண்ணா சாலை, ஆயிரம் விளக்கு, சென்னை - 6.
Ph:28516799, 28513109, 28513122, 55870482 Tata Phone (24 Hours)
E-Mail:sritrave@satyam.net.in Web:www.sreetravels.com Mobile:98402 31302

## ஸ்ரீ டிராவல்ஸ் அளித்திடும் அற்புதமான சுற்றுலாக்கள்

**உங்கள் கோடை விடுமுறையை குடும்பத்துடன் குதூகலமாக களித்திட இப்போதே திட்டமிடுங்கள்.**

**Tour No. 1:கேரள சுற்றுலா:** புறப்படும் தேதிகள்: **01.05.2003, 12.05.2003 -** சென்னை - திருவனந்தபுரம் - வர்கலா - கொல்லம் - ஆலப்புழா (படகு பயணத்துடன்) - கோட்டயம் - வைக்கம் - மூனாறு - கொச்சி - குருவாயூர் - மலம்புழா - கோயம்புத்தூர் - சென்னை.

பயணத்தொகை: ரூ. **4,500/-** பயண நாட்கள்: **7**

---

**Tour No. 2: இலங்கை சுற்றுலா *(பாஸ்போர்ட் உள்ளவர்களுக்கு மட்டும்)*** புறப்படும் தேதிகள்: **22.04.2003, 13.05.2003 -** சென்னை - திருச்சி - தூத்துக்குடி - கொழும்பு - கண்டி - கதிர்காமம் - திருக்கேட்டீஸ்வரம் - திரிகோணமலை - நுவரெலியா - கொழும்பு - தூத்துக்குடி - திருச்சி - சென்னை.

பயண நாட்கள்: இலங்கையில் **6** இரவுகள் / **7** பகல் பொழுதுகள்

பயணத்தொகை :ரூ. **13,900/-** திருச்சி - கொழும்பு - திருச்சி (விமானப் பயணம்)
ரூ. **16,900/-** சென்னை - கொழும்பு - சென்னை (விமானப்பயணம்)
ரூ. **10,900/-** தூத்துக்குடி - கொழும்பு - தூத்துக்குடி (கப்பல் பயணம்)

அனைத்து இடங்களிலும் நட்சத்திர ஓட்டல்களில் தங்கும் வசதிகள், சைவ உணவு, குளிர்பதன பேருந்தில் பயண வசதி மற்றும் அனைத்து வசதிகளுடன்.

சுற்றுலா முடிவில் கொழும்பில் இலங்கையின் இசைக்கலைஞர் பங்குகொள்ளும் அற்புதமான இசை நிகழ்ச்சியும் உண்டு.

---

**Tour No: 3:அந்தமான் சுற்றுலா:** புறப்படும் தேதிகள்:**25.04.2003, 09.05.2003**

சென்னை-போர்ட்பிளேர்-சென்னை. பயணத்தொகை: ரூ. **12,900/-** பயண நாட்கள் : **8**

ஒரு வழி கப்பல் மற்றும் ஒரு வழி விமானப்பயணங்கள். போர்ட்பிளேரில் கலை நிகழ்ச்சியும் உண்டு.

---

**Tour No. 4: டார்ஜிலிங் - கேங்க்டாக் சுற்றுலா:** புறப்படும் தேதிகள்: **02.05.2003, 20.05.2003 -** சென்னை - கல்கத்தா - கேங்க்டாக் - டார்ஜிலிங் - சென்னை.

பயணத்தொகை: ரூ. **6,500/-** பயண நாட்கள்: **10**

---

**Tour No. 5: ஹிமாசல பிரதேச சுற்றுலா- I :** புறப்படும் தேதிகள்: **27.04.2003, 15.05.2003**

சென்னை - டில்லி - சிம்லா - குலு - மணாலி - ரோடங்பாஸ் - சண்டிகார் - மதுரா - ஆக்ரா - சென்னை.

பயணத்தொகை ரூ. **6,900/-** பயண நாட்கள்: **11**

---

**Tour No. 6: பக்தி சுற்றுலா: பத்ரி - கேதார் சுற்றுலா:** புறப்படும் தேதிகள்: **22.05.2003**

சென்னை - பூரி - புவனேஷ்வர் - கல்கத்தா - கயா - வாரணாசி - அலகாபாத் - ஹரித்துவார் - ரிஷிகேஷ் - பத்ரிநாத் - கேதார்நாத் - டில்லி - மதுரா - ஆக்ரா - சென்னை.

பயணத்தொகை: ரூ.**8,500/-** பயண நாட்கள்: **14**

---

**Tour No. 7:கைலாஷ், மானசரோவர் புனித பயணம்:** புறப்படும் தேதிகள்: **04.06.2003, 05.07.2003**

**சென்னை - பெங்களூர் - காத்மாண்டு - மானசரோவர் - கைலாஷ் - காத்மாண்டு - பெங்களூர் - சென்னை. பயணத் தொகை ரூ. 68,000/- பயண நாட்கள்: 19**

---

**கைலாஷ் பயணத்தில் அனைத்து நாட்களும் தங்கும் வசதிகளுடன் மற்றும் தமிழக உணவு வசதிகளுடன். பெங்களூர் - காத்மாண்டு - பெங்களூர் (விமானப் பயணம்).**

**பாஸ்போர்ட் இல்லாதவர்கள் உடனே விண்ணப்பிக்கவும்.**

* மிகவும் தரமான தங்கும் வசதிகளுடன் * எல்.டி.சி. வசதி உண்டு
* கோடை நெரிசலை தவிர்க்க 60 நாட்களுக்கு முன்னதாகவே முன்பதிவு அவசியம்.

## மாணவர்களுக்கு வழிகாட்டும் துடிப்புத் தொடர்



• ஆர். கண்ணன்

'கை கொடுக்கும் கண்ணன்' என்ற தலைப்பில் 'கல்கி'யில் வெளியான கட்டுரையைப் படித்து விட்டு, ஏகப்பட்ட ஃபோன்கால்கள்! பள்ளி – கல்லூரி மாணவர்களும், வேலை தேடுவோரும், வேலையில் இருப்போரும் கண்ணனின் ஆலோசனைகளைப் பயன்படுத்தி முன்னேற விருப்பம் தெரிவித்தார்கள். இளைய தலைமுறையின் தேவையை உணர்ந்து, இந்தக் கட்டுரைத் தொடரில் அவர் ஒவ்வொரு வாரமும் பிரச்னைகளை அலசி ஆராய்ந்து எழுதுவார். சுருக்கமாக, இந்தத் தொடர் உங்கள் வாழ்க்கைக்கு ஒரு வழிகாட்டி!

– ஆசிரியர்

# ஏறு



"மேலே என்ன படிக்கறதுன்னே தெரியலை!"

"ஆளாளுக்குப் பண்ணின அட்வைஸால் நான் ஒரேயடியாக் குழம்பிப் போயிருக்கேன்!"

– இதுதான் இன்றைய இளைஞர்கள் தலைமுடியைப் பிய்த்துக் கொண்டு கூவுகிற நிலை.

இன்றைய இளம் தலைமுறைக்கு எக்கச்சக்க 'சாய்ஸ்' இருக்கிறது. இதைப் படிப்பதா, அதைப் படிப்பதா? எதைப் படித்தால் உடனே வேலை கிடைக்கும்? நினைக்கிறது போல வேலை கிடைக்க, எந்த மாதிரியான படிப்பைத் தேர்ந்தெடுக்க வேண்டும்?

இதெல்லாம் போதாது என்று, பெற்றோர்களின் 'பிரஷர்.' சொந்தம், பந்தம், மாமா, மச்சான், புதுசா வேலை கிடைச்சவன் என்று எல்லாரும் அட்வைஸ் என்கிற பெயரில் கொடுக்கிற பிரஷர். 'இதை மட்டும் படிச்சிட்டின்னா நீ எங்கியோ போயிடுவே!' என்று உசுப்பி விடுகிற மீடியா!

எப்படியோ ஒரு வழியாக முடிவு எடுத்து, அப்பாடா என்று படித்து முடித்தால், சேருகிற வேலைக்கும் படித்த படிப்புக்கும் சம்பந்தமே இல்லாமல் போய், வேலை செய்கிற இடத்தில் டன் கணக்கில் வாங்கிக் கட்டிக் கொள்ள வேண்டியிருக்கும்.

இதற்கு என்னதான் முடிவு? இருக்கிறது. ஆங்கிலத்தில் அதை 'கேரியர் பிளானிங்' என்பார்கள்!

'கேரியர் பிளானிங்?'

எந்த வேலைக்குப் போக வேண்டுமோ, அதற்கு வேண்டிய படிப்பைத் தேர்ந்தெடுப்

பது. அடுத்தது வேலையில் சேருவது. சேர்ந்த பின் அங்கே முன்னேறுவது. (சேர்ந்த அன்றைக்கு உட்கார்ந்த நாற்காலியிலேயே ரிட்டயராகிற வரை உட்கார்ந்திருக்கலாமா?) சுருக்கமாகச் சொன்னால், உங்கள் இலக்கு என்ன, அதை அடைவது எப்படி என்று திட்டம் இடுவது.

"இந்த பிளானிங் எல்லாம் எதுக்குங்க? ஏதோ படிக்க வைக்கறாங்க. படிச்சுட்டுப் போறோம். ஏதோ வேலைன்னு ஒண்ணு கிடைக்காமப் போகாது. அப்படியே நாளைத் தள்ளிட்டாப் போச்சு!" என்று விட்டேத்தி மனோபாவத்துடன் கேட்கலாம்.

கேரியர் பிளானிங் இருந்தால், 'அட, இத்தனை வாய்ப்புகள் இருக்கிறதா!' என்று தெரிந்து கொள்ளலாம். (பாரதியாராக மாறி 'எத்தனை கோடி வாய்ப்பு வைத்தாய் இறைவா!' என்று ஒரு கவிதையே எழுதலாம்!)

நீங்கள் பள்ளியில் படிக்கிறவராக இருந்து, மேலே என்ன படிப்புப் படிக்கலாம் என்று யோசிக்கிறதாக இருந்தாலும் சரி, அல்லது படித்து முடித்து டிகிரியைக் கையில் சுருட்டிக் கொண்டு, வேலை தேடுகிறவராய் இருந்தாலும் சரி, உங்கள் இலக்கை எட்ட முறையான வழியை உருவாக்கிக் கொள்ள முடியும்.

என்ன செய்ய வேண்டும் என்று போடப்படும் திட்டம் இருக்கிறதே, அதுதான் மிக மிக முக்கியம். திட்டம் முறையாகப் போட்டால்தான் பலன் முழுமையாகக் கிடைக்கும்.

# நூறு

நீங்கள் கற்றுக் கொண்டதெல்லாம் கருவிகள். உங்கள் வேலையைத் தீர்மானிக்கும் கருவிகள். அதனால்தான் சரியான கருவிகளைக் கையில் பிடிக்கத் திட்டம் போட வேண்டும்.

உங்கள் வருங்காலம் வேறு யார் கையிலும் இல்லை. உங்கள் கையில்தான் இருக்கிறது. நீங்கள்தான் உங்கள் கேரியரை உருவாக்க வேண்டும்.

ஏதோ அதிர்ஷ்டவசமாகக் கிடைத்த வேலையை ஏற்றுக் கொண்டு, அது ஆட்டி வைக்கிறபடி ஆடிக் கொண்டிருக்காதீர்கள். முன்னதாகவே தீர்மானித்து, செயல் படத் தயாராக இருங்கள். எப்படித் தீர்மானிப்பது என்ற வழிமுறைகளைப் பற்றி அடுத்த வாரம் பேசுகிறேன்.




— ஆர். கண்ணன்

படம் : யோகா

# தேவமருந்து - 30

# சருமத்தில் சுரைப்பூ!

“என்னன்னே தெரியலை டாக்டர்” என்று புலம்பலோடு வரும் நோய்கள் ஒரு பக்கம் இருக்க, 'இதுதான் பிரச்னை' என்றே வெளிப்படையாகத் தெரியும்படி சில சரும நோய்கள் உள்ளன. அதில் மிகவும் கொடுமையானது சோரியாசிஸ்தான்!

சோரியாசிஸ் என்பது நாள் பட்டு நிலைக்கக் கூடியது மட்டுமல்ல; எந்நேரமும் திடாரென்று உருவெடுத்து வரக் கூடும். பரம்பரையாகத் தொடரும், சருமத்தோடு நிற்காமல் மூட்டுகளைப் பாதிக்கும். இப்படி நிறைய பிரச்னைகள்.

சின்னதாக, வட்ட வடிவாக வெள்ளி செதில்களாகத் (psoriatic plaque) தொடங்கும். இது தலையில் தொடங்கி, முன்ன கைகள், மூட்டுகள், பின்பகுதி, புட்டம் என வேரூன்ற ஆரம்பிக்கும். தலையில் காணப்படும்போது வெறும் பொடுகு என்று நினைக்கத் தோன்றும். சருமத்தின் வட்டச் செதில் அமைப்பை வைத்துதான் இது பொடுகல்ல என்பதை தீர்மானிக்கிறோம்.

இந்த நோயினால் உடலில் உள்ள முடி மற்றும் நகம் பாதிக்கப்பட்டு, வறட்சியடைந்து, நாளடைவில் உதிர்ந்து போகும். நோயின் தன்மை, கடுமையாகும்போது, Psoriatic arthritis நோய் ஏற்படுகிறது. சில சமயம், சிறிய முகப்பரு போன்ற பழுப்புக் கட்டிகள் தோன்றி வேதனை தரும். வெயில் காலங்களிலும், பனிக் காலங்களிலும் அதிகரிக்கும்.



சோரியாசிஸ் வந்தால் மன உளைச்சல் உண்டாகாமல் இருக்குமா? பிரச்னை என்னவென்றால், மன உளைச்சல் அதிகமானால், சரும அழற்சியும் தீவிரமடையும். அப்புறம் குணம் காண்பது எப்படி? சில நேரங்களில் 'பயாப்ஸி' பரிசோதனை மூலம், சோரியாஸிஸின் தன்மை கண்டறியப்பட்டு சிகிச்சை மேற்கொள்ளப்படுகின்றது. 'emollients' என்ற சரும எண்ணெய்ப் பசையைக் கூட்டுகின்ற க்ரீமும், வைட்டமின் டி க்ரீமும் Coal tar, salicylic acid கலந்த மருந்துகளும் சில ஷாம்புகளும் பயன் தருகின்றன. புற ஊதாக் கதிரின் மூலம் செய்யக்கூடிய சில சிகிச்சைகளும் புழக்கத்தில் உள்ளன என்றாலும் அவற்றுக்கு, பின் விளைவுகள் இருப்பதாகச் சொல்கிறார்கள்.

ஆயுர்வேதத்தில், பொதுவாக, சரும நோய்களை 'குஷ்டம்' என்றே சொல்லும் வழக்கமுண்டு. 'தொழுநோய்' உள்பட, எல்லா சரும நோய்களுமே 'குஷ்டம்'தான். விரோதமாக உள்ள அன்ன பானங்களைச் சாப்பிடுதல் (உதாரணமாக, பாலும் மீனும்) எண்ணெய்ப் பசையுள்ள உணவுகளை அதிகமாகச் சாப்பிடுவது, வாந்தி முதலிய வேகங்களை அடக்குவது, சாப்பிட்டவுடன் உடற்பயிற்சி செய்வது, வெயிலில் அலைந்து விட்டு, உடனடியாகத் தண்ணீரைக் குடிப்பது, பகலில் தூங்குவது, சரியாக சமைக்கப்படாத ஆகாரங்களைச் சாப்பிடுவது, பூஜைக்குரியவர்களை அவமதிப்பது, பாபச் செயல்களைச் செய்வது போன்ற காரணங்

களால் பித்த வாத கோப கபங்கள் துஷ்டமடைந்து, சருமத்தை டப்படுத்தி, மகா குஷ்டங்களும், பதினொரு சிறிய குஷ்டங்களும் ஏற்படுகின்றன என்று ஆயுர்வேதம் கூறுகிறது.

சோரியாஸிஸைப் பொறுத்தவரை, சித்மம், ஏக குஷ்டம், தத்ரு என்ற பிரிவில் அடங்குகிறது. சிவந்தோ, வெளுத்தோ, தடித்தோ காணப்படும் இது, சொறிந்தால் பொடிப் பொடியான புரணிகளை உதிர்ப்பதாக இருக்கும். சுரைப்பூ போன்ற நிறத்திலிருக்கும். விசாலமாகப் பரவி, அரிப்பை உண்டாக்கும்.



**டாக்டர் எல்.மஹாதேவன்**

இம்மாதிரியான சரும நோய்கள் எல்லாமே குணப்படுத்தக் கூடியது அல்ல. சிலருக்கு நல்ல குணமாகும். ஒரு சிலருக்குச் சமனம்தான் பண்ண முடியும்.

சோரியாஸிஸுக்குச் சிறந்த சிகிச்சை என்பது ஸ்னேகபானத்தில் ஆரம்பிக்கும். ஸ்னேக பானம் என்பது மூலிகைகளால் காய்ச்சப்பட்ட நெய்களையும், எண்ணெய்களையும் கொடுப்பதாகும். இதில் பேய்ப்புடல் மற்றும் வேம்பினால் காய்ச்சப்பட்ட திக்தக நெய், குக்குலு திக்தக நெய் என்ற வேப்பம்பட்டை, சிற்றமார்து, ஆடாதோடை, கண்டகாரி இவற்றின் சேராங்கொட்டையும் குக்குலுவும் சேர்த்துக் காய்ச்சப்பட்ட நெய், இதையெல்லாம் உள்ளுக்குக் கொடுப்பதுண்டு. தேய்ப்பதற்கு, நீரடிமுத்து எண்ணெய், கடுகு எண்ணெய், சேராங்கொட்டை எண்ணெய், வெட்பாலை எண்ணெய், அருகம்புல் எண்ணெய், குக்குலு மரிச்சாதி, செம்பருத்தியாதி போன்ற தைலங்கள் நல்ல குணம் தரக்கூடியவை.

இதன்பிறகு பேதிக்கு மருந்து கொடுத்து, வாந்தி எடுப்பதற்கு மருந்து கொடுப்பார்கள். ஒரு சில இடங்களில் உள்ள சரும நோய்களுக்கு, அட்டைப் பூச்சியைக் கொண்டு அசுத்த ரத்தத்தை உறிஞ்சச் செய்யும் சிகிச்சையும் தரப்படும். சில நேரங்களில் கந்தகம், பேய்ப் புடலினால் செய்யப்பட்ட படவலமூலாதி கஷாயம் தரும் பழக்கமும் உண்டு. மலத்தை சுத்தி செய்வதற்கு வாயுவிடங்கம், கடுக்காய் இவற்றால் செய்யப்பட்ட மாணிபத்ர லேகியத்தைக் கொடுப்பதுண்டு. உடம்பில் தேய்த்துக் குளிக்க வேப்பம்பட்டை, கோரைக் கிழங்கினால் செய்யப்பட்ட சூரணம் தரப்படும். இதனால் சருமம் நாளடைவில் ஆரோக்கியம் அடையும். அரளி வேர், வேப்பம் வேர், வெட்பாலை கொன்றை, சித்ர மூலம், இவற்றைப் பொடித்து பசு மூத்திரத்தில் விட்டு, காய்ச்சி பாகுபதத்தில் இறக்கி, உடலில் தேய்க்கும் ஒரு பிரயோகத்தால் சோரியாஸிஸில் நல்ல பலனளிக்கிறது.

இது தவிர, அனேக முறை கவனமாக சோதனம் (உடல் சுத்தி) செய்ய வேண்டும். பதினைந்து நாட்களுக்கு ஒருமுறை, வாந்திக்கும், மாதமொரு முறை பேதிக்கும், மூன்று நாட்களுக்கொரு முறை நஸ்யமும் (மூக்கில் எண்ணெய் விடுதல்) செய்வது வியாதியைக் கட்டுப்பாட்டில் வைக்கும்.

(அடுத்த இதழில் நிறைவுறும்)



நூற்றுமுப்பத்தி நான்கு பந்துகளில் நூற்றி பதினாறு ரன்கள் எடுப்பது... அதுவும் மட்டையில் பட்ட பந்தை, வாயிலிட்ட மைசூர் பாகாய், பவுண்டரிகளும் சிக்ஸர்களுமாய் மாயமாய் மறைய வைப்பது என்பது... சும்மாவா?

உலகக் கோப்பையின் முற்பகுதி மாட்சுகளிலேயே இந்த சாதனையைப் 'படைத்தவரை 'மேரா லாரா மஹான்' என்று, தலைமேல் வைத்துக் கூத்தாட எத்தனையோ பேர் தயாராயிருக்கையில்... நாம் அஞ்ஞானத்தில் திளைப்பவர்களை விடுத்து, 'மெய்'ஞானக் கூத்தர்களை மட்டுமே அண்டினோம். விஷயஞான மிக்க நம் ரசிகர்களுக்கு ஞானக் கண்ணாலேயே நாம் எடுத்த பேட்டிகளைச் சமர்ப்பிக்கிறோம்.

சென்ற ஆண்டின் சிறந்த ஆசியப் பெண்மணிகளில் ஒருவராய்த் தேர்ந்தெடுக்கப்பட்ட சுஷ்மிதா சென்தான் முதலில் எதிர்ப்பட்டார். 'ஓ லாராவா? பஹுத் ப்யாரா" என்று நெகிழ்ந்தவர், 'ஒரு ஷேக்ஸ்பியரோ ஒரு ஹெமிங்வேயோ இன்று இருந்திருந்தால், லாராவை வைத்து ஒரு அமர காவியமே படைத்திருப்பார்கள்' என்று தமது இலக்கிய அறிவை அவிழ்த்தார். நிமிட நேரத்தில் ஒரு கவிதையைப் பிரசவித்தார்.

*"லாரா... ஓ*
*லாரா...*
*நீ இல்லாத ஊர்*
*ஓர் ஊரா?*
*உனக்குஇணையாக*
*கிரிக்கெட்டில் ஒரு*
*பேரா?*
*உன் மட்டையிலிருந்து*
*வருகுது 'ரன்'களின்*
*தாரா!*



கற்பனை:
ஜெய்ஸ்ரீ ராஜ்

# ஞானக் கிறுக்கன்!

*என் மண்டையிலிருந்து பிறக்குது கவிதைகள் சிரா;*
*இனியும் நீ வேறு நான் வேறா?"*

லாரா மெய் சிலிர்த்துத்தான் போய்விட்டார். சரி... சுஷ்மிதாவின் 'ப்ரெயினும்', ப்ரையன் லாராவும் நல்ல 'மாட்ச்'தான் என்று நினைக்கையிலே... தத்துப் பெண் ரீமா தன் கூடவேதான் இருப்பார் என்று சுஷ்மிதா கண்டிஷன் போடுவது நினைவில் நெருட, இலவச இணைப்புகளில் லாரா அக்கறை கொள்ளாததால்... "நான் ட்ரினிடாட்வாலாவாகவே இருக்க ஆசைப்படுகிறேன்; ரீமாவின் 'டாட்' ஆக இல்லை'' என்று மாட்ச் ஃபிக்ஸிங்கை முடித்து விட்டார்.




"ஆஹா... உங்க ஆட்டம் பிரம்மாதம்' காதில் விழுந்த தேன் சொற்கள் வந்த திசையில் திரும்பினால்... பரத நாட்டிய உடையில் பளிச்சிட்ட அம்மணியின் முகம் எங்கோ... எப்போதோ பார்த்தது போல அலைக்கழிக்க... "நம்ம ஸிதார் மேஸ்ட்ரோ பண்டிட் ரவிசங்கரின் பேத்தி... காவேரி" என்று யாரோ அறிமுகப்படுத்தியதும், சட்டென்று மின்னலடித்தது! அச்சு, அசல், அவர் முகமே! 'லாராவின் ஆட்டம் பற்றி' என்று அவரை வளைத்ததும்... "அவரும் ஆட்டக்காரர்; நானும் ஆட்டக்காரி; அவர் விளையாட்டரங்கில் ஆடுகிறார்; நான் கலையரங்கில் ஆடுகிறேன். அவர் மேற்கிந்தியர்; நானும் மேலை நாட்டில் (அமெரிக்காவில்) வாழும் இந்தியர். Tap-dance மாதிரி அவர் ஃபுட் - வர்க்; குச்சுப்புடியின் துரிதம்; பரதத்தின் நளினம்... எல்லாமே அவர் ஆட்டத்தில் இருக்கிறது" என்று குழைந்ததை அப்படியே லாராவுக்கு SMS செய்தோமா? "ஓ வண்டர்ஃபுல்; நான் அடிக்கடி அமெரிக்கா போவேனே!" என்று சந்தோஷித்தார் அவர். கையோடு, காவேரி பற்றிய பேப்பர் கட்டிங்ஸை எல்லாம் எதற்கு அனுப்பி வைத்தோம் என்று பிறகுதான் உதைத்தது. "நான் அமெரிக்கா போவதே அங்கு ஒரு சைக்கியாட்ரிஸ்டை பார்ப்பதற்குத்தான்; நானே அவருடன் பேசிப் பேசி என் மன உளைச்சல்களைச் சரி செய்து வருகிறேன். இவருக்கு என்னடா என்றால்,

அனுஷிகா என்று ஒத்த வயதில் ஒரு அத்தையும், நூரா என்றொரு இளமையான 'ஸ்டெப்' அத்தையும் இருக்கிறார்கள்; தற்சமயம் எல்லோரும் நல்ல ஃப்ரெண்ட்ஸ் என்று சொல்லிக் கொண்டாலும், காலப் போக்கில் சிக்கல்கள் ஏற்படுத்தக் கூடிய உறவுகள்தான்! அப்புறம் இவருக்கும் ஒரு சைக்கியாட்ரிஸ்டைத் தேட வேண்டி வரும். யம்மாடி. என்னைச் சிக்க வைக்காதீர்கள்" என்று கழன்று கொண்டு விட்டார்.

அப்படியே சிந்தனை வயப்பட்டு பயணத்தைத் தொடர்கையில் 'லாராஸ் லவ்' என்று பெரிய போர்டு கண்ணில் பட்டது. ஹா.... பிடித்து விட்டோம் லாராவின் கனவுக் கன்னியை என்று பாய்ந்து சென்றால், 'லாராஸ் லவ்'வைத் தட்டில் ஏந்திக் கொண்டு இங்குமங்குமாக வெள்ளையுடை தேவர்கள் பறந்து கொண்டிருந்தனர். வந்தவர்களை வரவேற்று, டெண்டுலர்கரின் படம் போட்ட டீ - ஷர்ட்டை அணிவித்து கையில், 'லாராஸ் லவ்'வையும் கொடுத்து விட்டு, என்ஜாய் என்றனர். அட....நம்ம டெண்டுல்கரின் ரெஸ்டாரண்ட்! அன்றைய மெனுவின் ஸ்பெஷல் 'லாராஸ் லவ்' என்பது விளங்க, லாராவின் காதலை மென்று, தின்று, கடித்துக் குதற விருப்பமில்லாமல் டெண்டுல்கர் பனியனையும் திருப்பிக் கொடுக்க யத்தனித்தோம். அப்போது அஞ்சலி உள்ளேயிருந்து பிரவேசித்து விட்டார். "இது சாதாரண பனியன் இல்லை; டெண்டுல்கர் கையெழுத்துப் போட்டிருக்கும் பனியன்; லாரா உபயோகித்த 'பாட்'டில், டெண்டுல்கரின் கையெழுத்து இருந்ததால்தான் தான் சதம் அடித்ததாக அவரே சொன்னாரே" என்று அடித்துப் பேசி, பனியனைத் தலையில் கட்டி, 'லாராஸ் லவ்'வை பார்சலும் செய்து விட்டார் அம்மணி.

கொஞ்சம் தூரம் கூடத் தாண்டியிருக்காது; எதிர்ப்பட்ட ரவீணா டாண்டன் மூக்கைத் திருகிக் கொண்டே வந்தார். 'ஸ்டம்ப்ட்' படத்தில் வேடஸ்டாக நடித்திருக்கிறாரே, நிச்சயம் கிரிக்கெட்டர்களைப் பற்றி ஒரு முடிவெடுத்திருப்பார் என்று அணுகினோம். "லாரா? அவர் துருதுரு பேட்ஸ்மென் தான்; ஆனால் திருதிரு இல்லையே? இப்போ நம் ஸ்ரீகாந்தை எடுத்துக் கொள்ளுங்களேன். அழகு காட்டுவது போல் அடிக்கடி அவர் மூக்கை உறிஞ்சும் அழகே அழகு! அது போல மேனரிஸம் உள்ள பாட்ஸ்மேன் தான் என் மேன்!" என்று அவர் மூக்கைச் சிந்த, லாராவின் சப்பை மூக்குக்கு இது தாங்குமா என்று 'எஸ்கேப்' ஆகிவிட்டோம்.

மலைக்க மலைக்கப் பார்த்துக் கொண்டிருக்கையில் வசீகரமாக எதிர்ப்பட்டார் மலைக்கா அரோராகான்! "லாராவைத் தான் மிகவும் பிடிக்கும். அவர் ஆட்டத்தில் என் மனத்தையே பறிகொடுத்து விடுவேன். எப்போ ஆடுவார், எப்போ ஓடுவார்,

The following particulars regarding the ownership of 'KALKI' the Tamil Weekly newspaper, are published, as called for by rule 8 of the Registration of Newspapers (Central) Rules 1956.

**FORM IV**

| | |
|---|---|
| 1. Place of Publication | : Chennai |
| 2. Periodicity of Publication | : Weekly |
| 3. Name of Printer | : K. Rajendran |
| Nationality | : Indian |
| Address | : Old No. 35, New No.14, 4th Main Road, Kasturba Nagar, Adyar, Chennai - 600 020. |
| 4. Name of Publisher | : K. Rajendran |
| Nationality | : Indian |
| Address | : Old No. 35, New No.14, 4th Main Road, Kasturba Nagar, Adyar, Chennai - 600 020. |
| 5. Name of Editor | : Seetha Ravi |
| Nationality | : Indian |
| Address | : 'Mangala Ganesh', Second Floor, 15, IV Seaward Road, Valmiki Nagar, Thiruvanmiyur, Chennai - 600 041. |

6. Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital : **Bharathan Publications Private Limited, 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.**

I hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

1.3.2003

K. Rajendran
Publisher

உலகக் கோப்பை கிரிக்கெட் போட்டியில் டாஸ் போடப் பயன்படுத்தப்படும் நாணயம் அக்மார்க் தங்கத்தில் செய்யப்பட்டவை. இதன் ஒரு பக்கத்தில் உலகக் கோப்பை கிரிக்கெட் போட்டியின் முத்திரையும், இன்னொரு பக்கம் தென்னாப்பிரிக்க ஜனாதிபதி தாபே பெகியின் முகமும் பொறிக்கப்பட்டிருக்கும். ஒவ்வொரு மேட்சுக்கும் ஒவ்வொரு புது நாணயம் பயன்படுத்தி டாஸ் போடப்படும். அந்த நாணயத்தில் எந்த இடத்தில், என்ன தேதியில், எந்த இரு அணிகளுக்கிடையில் போட்டி என்கிற விவரங்கள் பொறிக்கப்பட்டிருக்கும்.



எப்போ ஒடுங்குவார், ஒன்றும் புரிபடாது. அந்த விதத்தில் லாரா என் ஃபேவரிட். அவர் சொல்லிக் கொண்டிருக்கையில், தற்செயலாகத் திரும்பினால், அங்கே கையில் கர்லா கட்டையுடன் மைத்துனர் சல்மான் கான்; அடித்துப் பிடித்துக் கொண்டு ஓட்ட மெடுத்து விட்டோம்.

நின்ற இடத்தை நிமிர்ந்து பார்த்தால் 'ஸ்டார் வர்ல்ட்' அலுவலகம்! 'கதகதப்புக்கு ஏங்குகிறாராம் லாரா' என்று லாரா தத் தாவின் புகைப்படத்துடன் ஒரு நிருபர் கதையளந்து கொண்டிருக்க, 'பட்'டென்று ஒரு 'ப்ரெய்ன் வேவ்'... ஆஹா! லாராவிடம் லாராவைப் பற்றிக் கேட்டாலென்ன? 'லாரா ஸ்கொயர்ட்' என்று தலைப்பு கூட ரெடி யாகிவிட்டது... 'லல்லாரா...லாரப்பா' என்று 'ஹம்' பண்ணிக் கொண்டே லாராவின் இருப்பிடத்தை அடைந்தால்... 'ராஜஸ்தான் குளிரிலிருந்து இப்போதான் நடுங்கிக் கொண்டே ஷூட்டிங்கிலிருந்து திரும்பி யிருக்கிறேன்' என்று கதகதப்பு ஏங்கலுக்கு உண்மைக் காரணம் உரைத்தார் லாராதத்தா. நாம் கிரிக்கெட்டர் லாராவைப் பற்றி பிரஸ் தாபித்தது தான் தாமதம், "அவர் கிரிக்கெட் சீசனில் தான் மாடல், நான் காலம்பூரா ஒரிஜினல் மாடல்" என்று சூடாகி விட்டார். பாய் ஃப்ரெண்ட் கெல்லி டார்ஜி, 'நாலு வரு டங்களாகக் காத்திருக்கிறேன்; காத்திருந்த வன் பெண்டாட்டியை, நேற்று வந்தவன் தட்டிச் செல்கிறா மாதிரி ஏதாவது திசை திருப்பினாய்..!' என்கிற தினுசில், தசை நரம்பு களை எல்லாம் முறுக்கிக் கொண்டு, அவர் பக்கத்தில் வந்து நின்றவாறே அனல் கக்கும் பார்வையை வீச...

அதில் பஸ்மமாகிவிடாமல் தப்பித்துத் தலை தெறிக்க எதிர்த் திசையில் நடக்கையில், "லகான் ஸ்டைலில் ஒரு ஹாலி வுட் – பாலிவுட் கோலிவுட்" ப்ளாக் பஸ்டர் எடுக்கலா மென்று இருக்கேன்; சிம்ரன் தான் ஹீரோயின். ஒரு மாறுத லான, புது ஹீரோ ஸஜஸ்ட் பண்ணுங்களேன்'' என்று ப்ரேக் போட்டார் வாஷி பகனானி! "ஓய் நாட் ப்ரையன் லாரா?" என்றதும் சந்தோஷித் தார். 'இப்பவே ஃபிக்ஸ் பண்ணுங்க' என்றார். லாராவை செல்லில் பிடித்ததும், "ஹா... லவ்லி!கிடைத்து விட்டார் என் ஹீரோயின்; பெயரிலேயே, 'ரன்' இருக்கிறதே? மரங்களைச் சுற்றி அவர் ஓட, நான் 'காட்ச்' பண்ண, ...க்ரேட் ஃபன் யார்" என்று ஆனந்தக் கூத்தாடினார் லாரா.

ஓ.கே. படத்தின் பெயர் என்ன தெரியுமா? கோலி வுட்டில் 'ஞானக் கிறுக்கன்' அதுதான் ஒரிஜினல். அப்புறம் ஹாலி பாலிவுட்களுக்குப் புலம் பெயரும்..

அட்டைப் படம் (லாரா) - நன்றி: தி ஹிந்து



அப்பாக்களுக்கு மூளையே கிடையாது. அவர்களுக்கு இருப்பதெல்லாம் வெறும் ஞாபக சக்தி தான். அவர்கள் வாழ்நாள் நெடுக தவறுகளைச் செய்தவர்கள். அதே தவறுகளை அடுத்த தலைமுறையினரும் செய்து விடக் கூடாது என்பதில் எல்லா அப்பாக்களும் தெளிவாய் இருக்கிறார்கள். அனுபவ அறிவுதான் அவர்கள் சொத்து. ஓயாத அறிவுரைகள் மூலம் அதைத் தத்தம் வாரிசுகளுக்குத் தத்தம் செய்து விடத் துடிக்கிறார்கள். அறிவுரை என்பது கட்டுச் சோறு. வாழ்க்கை என்பது ஒரு வழிப் பாதை' Because life has no replay...எதையும் சரியாகச் செய்ய வேண்டும். என்ன?

ஓ... இந்த அப்பாக்கள்!

சிறிய வயதில் 'அப்பாக்களும், கிரிக்கெட்டும்' என்ற தலைப்பில் நான் எழுதாமல் விட்ட கட்டுரையிலிருந்து சில வரிகள்.

"என்னடா. சொல்றது புரியறதா?"

"ம்."

எதிரே கால் மாற்றி நான் பலக்க தலையாட்டுவேன்.

"எல்லாம் உன் நல்லதுக்குத்தான். புரிஞ்சுதா?"

"ம்."

"அழ அழச் சொல்வார் தமர். சிரிக்கச் சிரிக்கச் சொல்வார் பிறர். என்ன அர்த்தம்?"

"என்ன அர்த்தம்?"

மனத்தில் கேள்வி எதிரொலிக்க, அப்பாவின் கண்களைச் சட்டென தரை பார்த்து தவிர்ப்பேன். அம்மா கொடுத்த அக்ரை தம்ளர் காப்பியில் அப்பா தெம்பாய் மேட்டரைத் தொடர்வார்.

"கிரிக்கெட் என்பது ஊறுகாய் மாதிரி, ஓர் ஓரமாய் இருப்பதில் தவறில்லை. ஆனால் அதுவே உணவாகி விடக் கூடாது. படிப்பு தான் முக்கியம். அதுவே உன் வருங்கால வாழ்க்கைக்கு உத்திர வாதம். வரவிருக்கும் குருக்ஷேத்திரத்தை நீ வலுவாய் எதிர்கொள்ள, உனக்கு நான் உவந்து அளிக்



கும் பிரும்மாஸ்திரம். கவனம் கிளி யின் கழுத்தில் இருக்கட்டும். படிப் பைப் படித்து விடு. அதை உருப்படி யாய் செய்துவிட்டால் உன்னை யாரும் எதுவும் கேட்கப் போவதில்லை. என்ன?"

'சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம் சொல்லிய வண்ணம் செயல்.'



அப்பா, தன் எஸ்.எஸ்.எல்.ஸி மார்க் லிஸ்டை நான் பார்த்து விடக் கூடாதே என்பதற்காக, புத்தகத்தைப் பேங்க் லாக்கரில் வைத்திருக்கிறார்.

# ம.வே.சிவகுமார்

அப்பாவுக்குக் கிரிக்கெட் பிடிக்காது என்பதில்லை. அது எனக்குப் பிடிக்கிறது என்பதுதான் அப்பாவுக்குப் பிடிப்பதில்லை. அவருடைய கிரிக்கெட் டான் பிராட்மேன், ஃப்ராங்க் வொரல் என்று ஒரு கட்டத்தில் நின்றுவிட்டது. வாழ்வின் இதர பிரச்னைகள் அவரை ஓவர் டேக் செய்து விட்டன. தவிரவும் இந்திய அணியும் எப்போதும் என்னைப் போலத்தான். எதிர்பார்க்கிற மனங்களில் ஓர் ஆழ்ந்த நம்பிக்கையைத் தோற்றுவிக்க அவர்களால் ஒருபோதும் முடிந்ததில்லை. 'கில்லர் இன்ஸ்டிங்க்ட் வேணும்டா. அது இல்லேன்னா இப்படித்தான்'.

என் கிரிக்கெட் வருடங்கள் கேப்டன் நவாப் ஆப் பட்டௌடியின் காலத்தில் தொடங்கியது. அஜீத் வடேகர், சந்திரசேகர், விச்சு என்கிற விஸ்வனாத், பிரஸன்னா, ஃபாரூக் இன்ஜினியர் என்று ஜாம்பவான்கள் இந்திய அணியில் களை கட்டியிருந்த காலம். சினிமாக்காரர்களே எங்கள் ஆதர்சங்களாய் இருந்தார்கள். விடுமுறை நாட்களில் கோடையின் கத்திரி வெயிலை நாங்கள் உணர்ந்ததேயில்லை. விவேகானந்தர் சொன்னது மாதிரி, ஃபுட்பால் விளையாடுவது ஒரு வகை தியானமென்றால், கிரிக்கெட்டும் ஒரு வகையில் தியானம்தானே?

பட்டௌடியைப் பற்றி வியப்பதற்கு எவ்வளவு விஷயங்கள்? நவாப் என்ற பெயரில் மட்டும் அல்ல... உண்மையிலேயே மான்யம் வாங்குகிற மாஜி மகாராஜாதான் அவர். அவரது இரண்டு கண்களில் ஒரு கண் ஆட்டுக் கண். அந்தக் கண்ணில் அவருக்குப் பார்வையும் கிடையாது. கார்ட்டூன்காரர்கள் விரும்புகிற நீளமான மூக்கு. அது சரி. ஒரு கண்ணை வைத்துக் கொண்டு அவர் எப்படி கிரிக்கெட் ஆடுகிறார்? ஒற்றைக் கண்ணில் உலகம் எப்படி இருக்கும்? சைக்கிளில் நடுரோட்டில் எண்ணம் தோன்றி, அங்கேயே ஒரு கண் மூடி பரீட்சித்தபோது, எதிரே ஒரு லைட் மட்டும் எரிந்து வந்த லாரியில் மோதி ஆயுளில் ஆறு மாதம் ஆஸ்பத்திரியில்

கழிந்தது. பின்னாளில் பட்டெளடி என் கனவுக்கன்னி ஷர்மிளா தாகூரை மணந்தும், குவாலியர் சூட்டிங் மாடலாய் விளம்பரங்களில் தோன்றியும், மக்களின் மனத்திலிருந்து மறைந்து போனார்.

அப்பா காலம் முடிந்து என் காலம் தொடங்கியபோது, நான் இரண்டு விஷயங்களில் பட்ட அனுபவ அறிவில் தெளிவாய் இருந்தேன். ஆண்களின் முன்னேற்றப் பாதையில் இரண்டு பெரிய தடைக்கற்கள் உண்டு. முதலில் பெண்கள். அப்புறம் கிரிக்கெட். இரண்டிலும் வருடங்கள் விரயமாவதுதான் மிச்சம். கவனம் இவற்றில் கலையாமல் இருந்தால், ஒவ்வொரு ஆணும் தன் லட்சியத்தைக் குறைந்தது பத்து ஆண்டுகளுக்கு முன்னதாகவே சென்றடைய முடியும். பெரியவர்கள் தெரியாமலா சொல்வார்கள்?

"அப்பா!"

"ம்?"

பேப்பரில் கண் பதித்துத் தலை ஆட்டினேன். இப்போதெல்லாம் நான் ஸ்போர்ட்ஸ் பேஜையே பார்ப்பதில்லை. ஷேர் மார்க்கெட் பக்கத்தைக் கவலையாய்ப் புரட்டினேன். அது நம் கிரிக்கெட் ஸ்கோரை விடக் கேவலமாய் இருந்தது. கடுப்பில் தலை நிமிர்ந்தேன். எதிரே என் ஜூனியர் காரியார்த்தமாய் பணிவு காட்டினான்.

"என்னடா?"

"நான் கிரிக்கெட் ஆடப் போகட்டுமா?"

"என்னது? கிரிக்கெட்டா? நோ... படிப்புதான் முக்கியம். படிப்பைப் பார்... படிப்புதான் முக்கியம்."

இல்லாள் குறிப்புணர்ந்து அரை தம்ளர் காப்பி தந்தாள். அதைத் தெம்பாய் குடித்து விட்டு மகனுக்கு அனுமதிக்குப் பதிலாக, அப்பாவைப் போலவே அறிவுரை தந்தேன்.

"நெட்வொர்க்கிங் கோர்ஸ் சேரணும்னியே. எத்தனைக் கட்டணும்?"

"மாசம் மூவாயிரம் ரூபா... மொத்தம் ஆறு மாசம்."

"ம்... அப்புறம்? கிரிக்கெட்டைப் பாத்துண்டிருந்தா எப்படி? பணத்தைக் கட்டி ஒழுங்கா கோர்ஸை முடிக்கிற வழியைப் பாரு."

'தந்தை மகற்கு ஆற்றும் நன்றி அவையத்து

முந்தி இருப்பச் செயல்.'

அது சரி, தந்தைமார்களும், தனயன் மார்களும் இவ்விதமாகவே எத்தனை காலம் வாழ்வது? அறிவுரைகள் போதும். அறிந்தது அறியாதது, தெரிந்தது தெரியாதது அனைத்தும் நாம் அறிவோம்.

"எதுத்துப் பேசாதே. பல்லு உதுந்துடும்."

"அப்பா... உங்களுக்கும் வேணாம்,

---

"வர வர ஜனங்க போக்கு சரியில்லே... ரொம்ப மோசமாயிட்டாங்க..."

"எப்படி இவ்வளவு உறுதியாச் சொல்றீங்க...?"

"எவ்வளவுதான் சாமர்த்தியமா பொய் சொன்னாலும் நம்பவே மாட்டேன்றாங்களே..."

- கல்வன் கிருஷ்ணராஜ்

---

எனக்கும் வேணாம்."

"என்ன?"

"நமக்குள்ளே ஒரு போட்டி."

"போட்டியா? என்னது?"

"கிரிக்கெட்தான்... அப்பாக்கள் லெவன் வெர்ஸஸ் பையன்கள் லெவன்."

"எப்படி? எப்படி?"

"ஒன் டே மேட்ச்... ஆளுக்கு அம்பது ஓவர்."

"ஓ... ஒருவேளை நாங்க ஜெயிச்சுட்டா?"

"இப்படியே உட்கார்ந்த இடத்துலே அட்வைஸ் குடுத்துண்டு நீங்க உங்க தாதா வேலையை கண்டின்யூ பண்ணலாம்... ஆனா ஒண்ணு."

"என்ன?"

"நோ சிட்டிங் பிஸினெஸ். ஒருவேளை நாங்க ஜெயிச்சுட்டா?"

"நீங்க ஜெயிச்சுட்டா?"

"நீங்க உங்க தாதா போஸ்ட்லேர்ந்து ஹர்ட் ரிட்டையர் ஆயிடணும். அப்புறம் இந்த சீன் காட்டறது, குரலு

வுடறது, ரீல் ஓட்டறது இதையெல்லாம் குறைச்சுக்கிட்டு சிவா, ராமான்னு இருக்கணும்."

"அக்ரீட். நீ உடனே மேட்சை ஃபிக்ஸ் பண்ணிடு. சீ.. ஸாரி. அரேன்ஞ் பண்ணிடு."

அடுத்த மாதம் ஏழாம் தேதி ஞாயிற்றுக்கிழமையன்று இரு.வி.க ஸ்டேடியத்தில் அனல் பறக்கும் போட்டி எனத் தீர்மானிக்கப்பட்டு, விஷயம் கூடுவாஞ்சேரி டைம்ஸிலும் வந்துவிட்டது.



அப்பாக்கள் சார்பாக இந்திய அணியின் முன்னாள் ஆட்டக்காரர்கள் வெங்கட்ராகவன், ஸ்ரீகாந்த், சிவராமகிருஷ்ணன் போன்றவர்களை எங்கள் அணியில் சேர்ந்து விளையாட அழைப்பு வைத்தேன். அவர்கள் நிமிஷத்தில் உஷாராகி, பின்னணியை விசாரித்து, இளைய தலைமுறைக்கு எதிராக எதுவும் செய்வதற்கில்லை என்று கை விரித்து விட்டார்கள்... எனினும் தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமாதித்தனாக, ரிஸர்வ் பேங்க் ராமபத்திரன், ஸ்டேட் பேங்க் தமிழ்மணி, எல்ஐசி டிசௌஸா, ரெயில்வேஸ் ஃபெர்னாண்டஸ் என்று பல்வேறு நிறுவனங்களில் ஸ்போர்ட்ஸ் கோட்டாவில் கிரிக்கெட்டால் நுழைந்தவர்களை வட்டம் கட்டி, விவரம் சொல்லி, தடபுடலாய் பிராக்டீஸூம் ஆரம்பித்து விட்டது. புது பூட்ஸ், புது சாக்ஸ், புது ஸ்டம்பு, புது பேட், புது பால், செலவுக்கு வானமே எல்லை. எப்படியும் ஜெயித்தாக வேண்டும்... ஜெய் மா காளீ...

பையன்களும் உஷார் பார்ட்டிகள்தான். வெவ்வேறு கல்லூரி டீம்களில் இருந்து தேர்ந்த நிபுணர்களை உருவி, தங்கள் டீமை உருவாக்கி இருந்தார்கள். ஆனால் போட்டி என்று வந்ததும், நாங்கள் எங்கள் பர்ஸ்களை இறுக்கி விட்டதால், பையன்கள் தத்தளித்துத்தான் போய்விட்டார்கள். ஆயினும் இளைஞர்கள் அல்லவா? உற்சாகமாய்ச் சுவரிலே கோடு வரைந்து, உருட்டைக் கட்டையில் வில்வக் காயை உக்கிரமாய் அடித்து, பையன்களின் பிராக்டீஸ் தொடங்கியது.

திரு.வி.க ஸ்டேடியம். விஷயம் பரபரப்பாய் ஏரியாவில் பரவி, வெளியே கடலை, ஐஸ் விற்கிறவர்கள் கடை போட்டு விட்டார்கள். பல்வேறு கல்லூரிகளிலிருந்தும் பஸ்களில் மாணவர் கூட்டம் ஆரவாரித்து இறங்கியது. 'இந்தப் படை போதுமா? இன்னும் கொஞ்சம் வேணுமா?' பைக்கிலும், கார்களிலுமாய்ப் பெற்றோர்கள் வந்து இறங்கினார்கள். 'இன்னும் சிறிது நேரத்தில் பரபரப்பான அந்த மேட்ச் துவங்க இருக்கிறது! ஸ்டேடியத்தில் இருந்து சன் டீவிக்காக திருநாவுக்கரசு.

அன்றைய தினம் அகாலமாய் மழை பெய்து மேட்ச் டிராவில் முடிந்தது. எனினும் பிரச்னை என்று வந்து விட்டதால், விஷயத்தில் முடிவு தெரிய வேண்டும் என்று, என்னிடம் ஒரு ரூபாய் வாங்கி டாஸ் போட்டார்கள்.

"ஹெட்ஸ்!"

பெற்றோர்கள்தான் ஜெயித்தோம். நான் மணிபர்ஸில் என் 'ஷோலே' டைப், அதாவது இரண்டு பக்கமும் ஹெட்ஸ் பொறித்த அபூர்வ ரூபாய் காயினை பத்திரப்படுத்தினேன். கூட்டம் கலைந்து ஸ்டேடியத்தில் என் பையன் கண்ணில் பட்டான்.

"இங்கே என்னடா பண்ணிண்டிருக்கே? போய் ஏதாவது படி."

**"முருகன்" என்னும் வாழ்த்தொலி எங்கும் முழங்கட்டும்!**

# ஆறுபடைவீடுகளில் முதன்மை பெற்றுத் திகழும் பழனியில் பங்குனி உத்திரத்தன்று (18.3.2003)

## முருகனடியார்களுக்கு அன்னதானத் தொண்டில் ஈடுபட வாய்ப்பு!

பேரன்புடையீர் வணக்கம். ஸ்ரீ ஞானதண்டாயுதபாணிப் பெருமான் தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம்.

கலியுக வரதனும், கண்கண்ட தெய்வமுமான முருகப்பெருமான் குடிகொண்டுள்ள ஆறுபடை வீடுகளில் முதன்மை பெற்றுத் திகழ்வது பழனி ஆகும். இப்பழனி 'திருவாவினன்குடி' என நக்கீரரால் அழைக்கப்பட்ட திருத்தலம். அடிவாரத்தில் குழந்தை வேலாயுதசுவாமியாகவும், மலைமேல் தண்டாயுதபாணித் தெய்வமாகவும் திகழ்ந்து, தனக்கென்றும் வேண்டா ஆண்டிக்கோலத்தில் தன்னை நாடி வருவோர்க்கெல்லாம் முருகப்பெருமான் நல்லருள் புரிந்து வருகின்றான். இத்திருத்தலத்தில் நவபாஷாணத்தில் போகர் முனிவரால் உருவாக்கப்பட்ட திருமுருகனுக்கு சகல வியாதிகளையும் போக்கும் பேராற்றல் இருப்பது உலகோர் உணர்ந்த உண்மை.

தெய்வப்பழனியில் முருகப்பெருமான் பக்தர்களுக்கு "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்" என்ற தனி அமைப்பின் மூலம் கிரிவலப்பாதையில் அமைந்துள்ள ஸ்ரீ வனதுர்க்கை அம்மன் திருக்கோயில் எதிரில் பங்குனி உத்திரத்தன்று அன்னதானத் திருப்பணி நடக்கவிருக்கிறது. அரிய இத்திருப்பணியில் முருகபக்தர்கள் பங்கேற்று தாங்கள் எதை நினைத்து அன்னதானம் செய்ய விரும்புகிறீர்கள் என்பதை தெரிவித்தால் அதன்படி பழனியில் உங்களுக்காக பங்குனி உத்திரத்தன்று அன்னதானம் செய்கிறோம். அன்னதானத்திற்கு தங்களால் இயன்ற நன்கொடையை அனுப்பி அருள்சுரக்கும் அன்பு தெய்வம் ஸ்ரீ ஞானதண்டாயுதபாணியின் திருவருள் பெற்று பெருவாழ்வு வாழவேண்டி அன்போடு அழைக்கிறோம்!

★ தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.

★ ரூ.500/- அனுப்பும் ஆன்மிக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் ஒரு ஆண்டிற்கு அனுப்பி வைக்கப்படும்.

★ ரூ.1000/- அனுப்பும் ஆன்மிக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

★ ரூ.5000/- அனுப்பும் ஆன்மிக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

ரூ.500, ரூ.1000, ரூ.5000 அனுப்பும் முருகபக்தர்களுக்கு பழனியில் பூஜிக்கப்பட்ட ஸ்ரீ ஞானதண்டாயுதபாணி வெள்ளி டாலரும், பிரசாதமும், வண்ணப்படமும், சிறிய அளவில் கந்தர் சஷ்டி கவசம் புத்தகமும் அனுப்பி வைக்கப்படும்.

ரூ.5000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு ஒவ்வொரு வருடமும் பழனியில் பங்குனி உத்திரத்தன்று அன்னதானம் செய்து தொடர்ந்து பத்து ஆண்டுகளுக்கு 'ஆன்மீகம்' மாத இதழ் தங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். மேலும் தாங்கள் விரும்பும்போது சந்ததியினரின் முகவரிக்கும் மாற்றம் செய்து தருகிறோம். ஆன்மீக அன்பர்கள் ஒவ்வொருரின் பூஜை அறையும் புனிதம் பெறவேண்டும் என்ற இறைசிந்தனையோடு ரூ.5000 செலுத்துபவர்களுக்கு 1024 பக்கங்களுடன் கூடிய பெரிய அளவில் உள்ள அருணகிரிநாதர் அருளிச்செய்த "திருப்புகழ்" நூலை அனுப்பி வைக்கிறோம்.

நன்கொடை அனுப்பும் முருகபக்தர்கள் (Sri Annapoorani Annadhana Seva Trust, Chennai - 4) என்ற பெயரில் Cheque/D.D/M.O மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி ஸ்ரீ ஞானதண்டாயுதபாணியின் பேரருளைப் பெற அன்புடன் வேண்டுகிறோம்.


பழனி ஆண்டவர் - உற்சவர்

நன்கொடைகளுக்கு 80 G பிரிவின்படி வரிவிலக்கு உண்டு.

*Cheque / D.D / M.O* அனுப்ப வேண்டிய முகவரி :


## ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்

**SRI ANNAPOORANI ANNADHANA SEVA TRUST (Regd.)**

68, Nadu Street, Mylapore, Chennai - 600 004.

Tel : 24959302 Fax : (044) 7102308 E-mail: siva siva@vsnl.net


**பழனி ஆண்டவன் நல்லருள் பெற்று உய்வோமாக!**



• மின்னல் ரவி



# மின்னல் ரவியும் காத்தாடியும்!



ஊர்க்குருவி

நாடே கிரிக்கெட் ஜுரத்தில் முங்கிக் கிடக்க, கடந்த சில வாரங்களாகக் காணாமல் போன ஊர்க்குருவி, கில் கிறிஸ்ட் அடித்த சிக்ஸர் மாதிரி ஸ்லோ மோஷனில் பறந்து விழுந்தது டேபிளில்.

"நீயா?"

"என்னப்பா, சினிமாப் பட பெயரெல்லாம் சொல்லுதே."

"இண்டலா, கொஞ்ச நாளா காணோமேன்னு நிம்மதியா இருந்தேன். வந்துட்டியா, விஷயத்தைச் சொல்லு."

"சொல்றேன். போன வாரம் இரண்டு நாடகம் பார்த்தேன்" என்ற ஊர்க்குருவி வயிறு(?!) குலுங்கச் சிரித்தது.

"ஏன் சிரிக்கற?"

"நினைச்சாலே சிரிப்பு வருது. பொன்னியின் செல்வனை மேடையேற்றுனாங்களே மேஜிக் லேண்டன் குழு. அவங்க இந்தத் தடவை இத்தாலிய நாடக ஆசிரியர் 'டேரியோ ஃபோ'வுடைய நாடகத்தை 'மின்னல் ரவி'யாகப் போட்டாங்க!"

'மின் னல் ரவியா?'

"ஆமாம்பா, மின்னல் மாதிரி வந்து திருடிட்டுப் போற கேரக்டர் ரவி. மனைவிட்ட சொல்லிட்டு கவுன்ஸிலர் நெப்போலியன் வீட்டுக்குத் திருடப் போறான். திடீர்னு மனைவிக்கு என்னமோ சந்தேகம் வந்து தொலைக்க, கவுன்ஸிலர் வீட்டுக்குப் ஃபோன் பண்ணி ரவிட்ட பேசறாங்க. இந்த நேரத்துல கவுன்ஸிலர் தன் காதலியைத் தள்ளிட்டு வர, ரவி மெகா சைஸ் கடிகாரப் பெட்டியில ஒளிஞ்சுக்கறான். பெண்டுலம் அடிக்கடி அவன் மண்டையைப் பதம் பார்க்க, ரவி கத்திக்கிட்டு வெளியே வர, அந்த நேரம் பார்த்து கவுன்ஸிலரோட மனைவி வந்து சேர, ரவியோட மனைவியும் வீட்டுக்குள்ள புக... அப்புறமென்ன, ரகளைதான்! கூடவே

தொடங்குது காமெடிப் பட்டாசு!"

"நீயே வயிறு குலுங்க சிரிச்சேன்னா நாங்களும் நிச்சயம் சிரிப்போம்."

"இந்த நாடகத்தைத் தமிழுக்குக் கொண்டு வந்தவர் சித்தி, அண்ணாமலை புகழ் ரூபன். எந்தப் பாத்திரமும் மிகைப்படுத்தப்படலை. எல்லாருமே இயல்பா நடிச்சிருக்காங்க. நீங்க கண்டிப்பா போய்ப் பார்க்கணும்."

"இவ்வளவு சொன்ன பிறகு பார்க்காமலா?"

"அப்புறம் "நிஜமல்ல கதை"ன்னு ஒரு நாடகம்."

"தலைப்பே காமெடியா இருக்கே."

"ஆமா... ஏழு கடல்தாண்டி, ஒரு ராட்சஸன் வயித்துக்குள்ள ஒளிச்சு வைத்த மாதிரி, காணாமப் போயிருந்த அந்தக் கால சக்ஸஸ்புல் சபா நாடக ஃபார்முலாவை, ரொம்ப நாளைக்கு அப்புறம் 'எப்படியோ' தேடிக் கண்டுபிடிச்சு, இந்த நாடகத்துக்குக் கொண்டு வந்துட்டார் காத்தாடி ராமமூர்த்தி."

"அப்படியா..?"

"ஆமாப்பா... ஒரு பத்து ரூபா இருக்குமான்னு அப்பப்போ கைமாத்து கேட்கற பஞ்சு, 'எதையோ கண்டு பிடிக்கிறேன் பேர்வழி'ன்னு அரை நிஜாரும், டெஸ்ட் ட்யூபுமா அலையற அப்பாட்ட, வீட்டை வித்தா நாற்பது லட்ச ரூபாய் கிடைக்கும்னு சொல்ல, மறுக்கிறார் அவர். டென்ஷனோட உச்சத்துக்கே போன பஞ்சு, அப்பா வச்சிருக்கிற டெஸ்ட் ட்யூபைப் பிடுங்கி தோட்டத்தில் வீச, மறு நாள் அங்கே, செடியில் ரூபாய் நோட்டுகள் காய்த்துத் தொங்குகிறது."

"அட."

"அப்புறம்தான்பா காமெடி மழை... எல்லாத்தையும் நானே சொல்லிட்டா, நீ நாடகம் பார்க்க மாட்டே... அதனால இவ்வளவுதான்..."

"என்னப்பா நீ!.."

"இன்னொரு விஷயம், இந்த இரண்டு நாடகங்களையும் பார்க்க வந்திருந்த கூட்டத்தைப் பார்த்தா நாடகத்துக்கு மவுசு கூடற மாதிரி இருக்குப்பா" என்ற ஊர்க் குருவி, "வந்த வேலை முடிஞ்சுட்டுப்பா வரட்டா" என்று பறந்தது! ○

## கிறிஸ்டோபரின் கிரிக்கெட் நூலகம்

கிரிக்கெட்டுக்கென்றே லார்ட்ஸ் மைதானத்திற்குப் பிறகு பெரிய நூலகம் இருப்பது அமெரிக்காவின் பெனிசில்வேனியா பகுதியில்தான். 'ஹாவர்ஃபோர்ட்' என்ற நகரில் அமைந்துள்ள இந்த நூலகத்தின் பெயர் "மாரீஸ் கிரிக்கெட் நூலகம்". இந்த நகரில் உள்ள கல்லூரியில்தான் முதல் கிரிக்கெட் கிளப் உருவானது. சொல்லப் போனால் பேஸ்பாலைவிட, கிரிக்கெட்டுக்குச் சற்றே அதிகக் கூட்டம் சேரும் ஒரே அமெரிக்க நகரம் எனலாம்.

1904ல் ஹாவர்போர்ட் கிரிக்கெட் அணியின் கேப்டனாக விளங்கியவர் கிறிஸ்டோபர் கிறிஸ்டி மாரீஸ். இந்த நூலகத்துக்காகப் பெரும் நன்கொடையையும் அவர் அளிக்க, அவர் பெயரையே நூலகத்துக்கு வைத்துவிட்டார்கள்.

இந்த நூலக நிர்வாகத்தின் ஆலோசனைக் குழுவில் உள்ள பிரபலங்களில் இருவர் ரிச்சர்ட் ஹாட்லி மற்றும் சோபர்ஸ்.

இது நூலகமா, அருங்காட்சியகமா என்று கேட்கும் வகையில் புத்தகங்களோடு வேறு பல விஷயங்களும் இங்கு பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளன. அந்தக் கால கிரிக்கெட் புகைப்படங்கள், பேட்கள், அந்தக் கால கிரிக்கெட் வீரர்கள் அணிந்த டைகள், பெற்ற கோப்பைகள் ஆகியவை அணி வகுக்கின்றன. நம் நாட்டைச் சேர்ந்த அமர்சிங் என்பவர் அமெரிக்க கிரிக்கெட் குறித்து எழுதிய சரித்திரமும் இங்கே இருக்கிறது.

— ஆதர்ஷ்

# 'சிவாஜி' பட்டம் கொடுத்தது ஜெயலலிதா?

ஆஸ்திரேலிய ரசிகர்களில் சிலர் விளையாட்டின் தொடக்கத்தில் ஒரு கொடியை ஆட்டிக் காண்பித்தனர். கங்காரு ஒன்று அதில் இருந்தது. அதன் மடியில் இருந்தது கங்காருக்குட்டி அல்ல! உலகக்கோப்பை. It is in the bag என்ற வாசகம் வேறு. அப்போது புன்னகையுடன் அதை அலட்சியம் செய்த இந்திய கிரிக்கெட் ரசிகர்கள், போட்டியின் முடிவுப் பகுதியில் அந்தக் கொடியை மீண்டும் க்ளோஸ் அப்பில் காட்டியபோது, வயிற்றெரிச்சலான பெருமூச்சு விட்டிருப்பார்கள்.

கண்ணில் தென்பட்டவர்கள் எல்லாம் இந்த அணிதான் ஜெயிக்கும், அந்த அணி ஊத்திக்கும் என்று ஆருடம் கூறிக் கொண்டிருக்க, ஜோதிடக்காரர்கள் சும்மாயிருப்பார்களா? வித்வான் லட்சுமணன் "இறுதிச் சுற்றில் மேற்கிந்திய அணியும் இந்திய அணியும் மோதும். என் ஆசை இந்தியா வெல்ல வேண்டும் என்பது. ஆனால் நடக்கப் போவதென்னவோ அதற்கு நேரெதிர்" என்றார். இது நிஜமா? என்பது விரைவில் தெரிந்து விடும்.

'அந்தக் காலத்தில் கிரிக்கெட் சூதாட்டம் உண்டா' என்ற யூகிசேதுவின் கேள்விக்கு எழுத்தாளர் ராண்டார் கை அளித்த பதில் சுவாரசியமானது. "விஜய் மர்சண்ட் என்ற பிரபல கிரிக்கெட் வீரர் ஒவ்வொரு டெஸ்ட் பந்தயத்



• வினோதினி



• ராண்டார்கை

திலும் சதமோ, இரட்டைச் சதமோ அடிப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார். அப்போதெல்லாம் பார்சிகள், ஆங்கிலேயர்கள், இந்துக்கள், முஸ்லிம்கள் என்று தனித் தனி அணிகளும் உண்டு. இந்து அணியில் இடம் பெற்றிருந்த விஜய் மர்சண்ட் முஸ்லிம் அணிக்கு எதிராக ஆடிய இரு பந்தயங்களில், மிகக் குறைவான ரன்கள் எடுத்து அவுட்டானார். இதைத் தொடர்ந்து அவருக்கு நிறைய மிரட்டல்கள் - எதிரணியிடம் பணம் வாங்கிக் கொண்டு விலை போய்விட்டதாக..!

ராஜ் டி.வி.யில் நடிகை வினோதினி ஒரு நகைக்கடைக்கு வருபவர்களிடம் கேள்வி கேட்டு, சரியான பதிலளிப்பவருக்கு ஸ்பான்சர் சார்பில் பரிசளித்துக் கொண்டிருந்தார். ஒரு குடும்பத்திடம் "சிவாஜி கணேசனுக்கு சிவாஜி என்கிற பட்டத்தைக் கொடுத்தது யார்?" என்ற கேள்வியைக் கேட்க, பதிலறியாத குடும்பத் தலைவர் தம் மனைவியின் உதவியை நாடினார். பர்தாவுக்குள்ளிருந்து "ஜெயலலிதா" என்ற பதில் வந்தது. காமெடி அதோடு நிற்கவில்லை. "தப்பும்மா, அவங்க கொடுத்தது செவாலியே பட்டம்" என்ற வினோதினி, பிறகு பெரியார் என்ற சரியான பதிலையும் கூறினார். அ.தி.மு.க.வினருக்கு ஜெயலலிதா தான் தமிழகமே என்றால், வினோதினியைப் பொறுத்தவரை ஜெயலலிதாதான் பிரெஞ்சு அரசும் கூடவோ?

- சேனல்பாய்

# தீர்வு!

"இவர் உங்களுக்கு என்ன வேணும்?" மருத்துவமனை டீன் கேட்டார்.

"அண்ணன் ஸார்... பெரியப்பா பையன்" என்றான் மார்க்கண்டன்.

"பிரச்னை இல்லை மார்க்கண்டன். ப்ரீத்திங் நார்மலாயிட்டு... ட்ரீட்மெண்டுக்கு உடம்பு ரெஸ்பாண்ட் பண்ணுது.. இது பெரிய விஷயம். நேத்து இந்த அளவுக்கு அவர் உடம்பு எங்களோடு கோவாப்பிரேட் பண்ணலை... நேத்தி கேட்டிருந்திங்கன்னா... க்ரிட்டிக்கல்ன்னுதான் சொல்லியிருப்பேன்."

"ரொம்ப தேங்க்ஸ் ஸார்."

"ஓ.கே. மிஸ்டர் மார்க்கண்டன்... நாளைக்கு ரெகுலர் வார்டுக்கு மாத்திடறோம்."

பேசிக்கொண்டே தனது அறைக்குள் நுழைந்தார் டாக்டர்.

மார்க்கண்டன் திரும்பினான். "டாக்டர் என்னப்பா சொல்றாரு?" பெரியப்பா ஆவலாய்க் கேட்டார்.

"பயப்பட ஏதும் இல்லேங்கிறாரு."

"அப்பாடா... இப்பதான் நிம்மதியா இருக்கு. நான் கேட்டா டாக்டருங்க எங்கப்பா பதில் சொல்றாங்க.... நீ ரிப்போர்ட்டர். உன்கிட்ட பொறுமையாச் சொல்லுவாங்கன்னு தான் கேட்கச் சொன்னேன்."

மார்க்கண்டன் மீண்டும் ஒருமுறை அண்ணனை அருகே சென்று பார்த்தான். தலை மாட்டில் அமர்ந்திருந்த அண்ணியைப் பார்த்துச் சிரித்தான்.

"தைரியமா இருங்க அண்ணி... பயப்பட ஒண்ணுமில்லை."

அறையை விட்டு வெளியே வந்தான்.

"அண்ணே..." வாசலில் நின்றிருந்த தம்பி கஜேந்திரன் அழைத்தான்.

"என்னடா...? நீ ஏன் இங்கே இருக்கே... ஸ்கூலுக்குப் போகலையா?"

"நாளைக்குப் போயிடுவேண்ணா." என்றவன் தயங்கி, "ஜெனரல் வார்ட்டுக்குள்ள எட்டிப் பாரேன்" என்றான்.

"ஏண்டா..." என்றபடி மார்க்கண்டன் எட்டிப் பார்த்தான். அடுத்த விநாடி தூக்கி வாரிப்போட்டது.

வரிசையாக இருந்த கட்டில்களில் அவர்கள் படுத்திருந்தார்கள். கிட்டத்தட்ட உடம்பு முழுக்க பேண்டேஜ் போடப்பட்டிருந்தது. டிரிப்ஸும், சிலருக்கு ரத்தமும் ஏறிக் கொண்டிருந்தது.

"ஆக்ஸிடெண்டா?" கஜேந்திரனிடம் கேட்டான்.

"இல்லண்ணா... அடிதடி. நாப்பது பேருக்கு இதே மாதிரி வெட்டு, குத்து. பக்கத்து ரூம்லயும் ஆளுங்க இருக்காங்க" என்றான்.

மார்க்கண்டன் எட்டிப் பார்த்தான். அங்கேயும் வரிசையாகப் படுத்திருந்தார்கள். அதோடு சிலர் ரத்தக்கறை படிந்த உடையோடு உடலில் கட்டுப் போட்டுக் கொண்டு நின்றிருந்தார்கள்.

மார்க்கண்டனுக்கு அந்தச் சூழ்நிலை வியப்பாக இருந்தது. என்னவென்று அறிந்து கொள்ளும் ஆர்வம் ஏற்பட்டது. டியூட்டி டாக்டரை நெருங்கினான். பத்திரிகையின் பெயரைச் சொல்லி அறிமுகப்படுத்திக் கொண்டான்.

"அடிதடி ஸார்... இந்த வருஷத்துல இது மூணாவது தடவை.... மேல்திட்டுன்னு ஒரு கிராமம், எப்பப் பார்த்தாலும் சாதிப் பிரச்னை... அரசியல்னு அடிதடி... ஜூன் மாசம் வாய்க்கால் தகராறுல ஒருத்தரையொருத்தர் வெட்டிக்கிட்டாங்க... இப்ப கடுகாட்டுப் பிரச்னை. பார்த்திங்களா? பாளம் பாளமா பொளந்திருக்காங்க... எத்தனை பேருக்கு ஆபரேஷன்... எவ்வளவு பேரை



திருச்சிக்கு அனுப்பறதுன்னு நாளைக்குத்தான் தெரியும்" என்றார்.

மார்க்கண்டன் மீண்டும் அவர்களைப் பார்த்தான். வாட்டசாட்டமாக இருந்தார்கள். உடம்பு முழுதும் பேண்டேஜ் சுற்றப்பட்டிருந்தது.

"விட்டுடுவமா? நம்ம இடுகாட்டுப் பக்கம் வந்தானுங்க, வெட்டிச் சாய்ச்சிட மாட்டோம்" தலையில் பேண்டேஜ் போட்டிருந்த ஒருவர் பக்கத்தில் நின்றிருந்த இளைஞனிடம் கூறிக் கொண்டிருந்தார்.

"நம்மாளுங்க அங்க நிக்கிறானுவோ... விட மாட்டோம்ல" என்றான் அந்த இளைஞன்.

மார்க்கண்டனுக்கு அவர்கள் பிரச்னையை அறிந்து கொள்ளும் ஆர்வம் ஏற்பட்டது. ஒரு நிருபருக்குரிய ஆர்வம்.

"என்ன ஸார் பிரச்னை... ஏன் இப்படி?"

பேண்ட் அணிந்து காயமில்லாமல், நாகரிகமாக நின்று கொண்டிருந்த அந்த இளைஞனிடம் கேட்டான்.

அவன் மார்க்கண்டனை மேலும் கீழும் பார்த்தான். "நீங்கள் யார் ஸார்?" என்றான்.

"ரிப்போர்ட்டர்."

"இப்படி வாங்க ஸார்..." என்றபடி மார்க்கண்டன் கையைப் பிடித்து தனியே அழைத்துச் சென்றான்.

"நானே உங்க பத்திரிகைக்கு எழுதலாம்னு இருந்தேன். பல வருஷமாகவே பிரச்னை ஸார்... சின்ன கிராமம். நானூறு பேர் தான் ஜனத்தொகை. ஆனா வருஷத்துக்கு ரெண்டு தடவை ஏதாச்சும் ஒரு பிரச்னை வெடிச்சிடும். பேசித் தீர்த்துக்கிற

# திருவாரூர் பாபு

பழக்கமே கிடையாது. அடிதடி வெட்டுக்குத்துன்னு ஆயிடும். போன தடவை ரெண்டு பேர் செத்தாங்க... நல்ல வேளையா இப்ப யாரும் சாகலை... ஆனா படுகாயம். ரெண்டு பேரை குண்டர்கள் சட்டத்துல உள்ள போட்டா பிரச்னை தீர்ந்திடும் ஸார்.... ரெங்கசாமி, வாத்தியார்னு ரெண்டு பேர். இவங்க தான் எல்லாத்துக்கும் காரணம். இவங்களுக்குப் பின்னாடி சில பேர். சாதி அடிப்படையில் குருப் குருப்பா... அவங்க தூண்டிவிட்டா இவங்க அடிச்சுக்குவாங்க. அவங்க ஜாலியா பங்களாக்குள்ள உட்கார்ந்துக்குவாங்க... இவனுவோ கட்டுப் போட்டுக்கிட்டு ஆஸ்பத்திரியில வாரம் பத்து நாள்ன்னு கிடப்பானுங்க... படிக்காத ஆசாமிங்க... எப்படி அடக்குறதுன்னு தெரியலை..."

"பிரச்னை வர்றப்ப போலீஸ் நடவடிக்கை இருக்காதா?"

"இருக்காது ஸார்... மேல்திட்டு கிராமம், மணல்மேல்குடி ஒன்றியத்துல இருக்கு. போலீஸ் ஸ்டேஷன் வேதாரண்யத்துல... கிட்டத்தட்ட இருபத்தைஞ்சு கிலோ மீட்டர். பிரச்னைன்னா ஆள் போயி அவங்க வர்றதுக்குள்ள இங்க எல்லாம் முடிஞ்சிடும். அதே மாதிரி கேஸும் நிக்காது ஸார். போலீஸ்காரங்க அவ்வளவு தூரம் வர்றதுக்கு அலுத்துக்கிட்டு,



சமாதானமாப் போயிடுங்கன்னு சொல்லிடு வாங்க. ஆனா இந்தத் தடவை சீரியஸ் ஸார்... கவர்ன்மெண்ட் தலையிடலேன்னா அடுத்த தடவை நாலு பேராவது சாவான். எங்க தெரு வழியா பிணத்தைத் தூக்கிக்கிட்டு போகக் கூடாதுன்னு ஒரு சாதி... இப்படித் தான் போவோம்னு இன்னொரு சாதி... நேத்தி பொணத்தைக் கீழே போட்டுட்டு வெட்டிக்கிட்டானுவோ.... வயித்தெரிச்சல்" என்றான்.

மார்க்கண்டனுக்கு வியப்பாக இருந்தது. பிணத்திற்காக அடித்துக் கொண்டு இப்படிக் காயப்பட்டிருக்கிறார்கள். இவர்களில் இன்னும் இரண்டு பேர் செத்திருந்தால் என்னவாகியிருக்கும்?

"தயவு செஞ்சு இதை உங்க பத்திரிகை யில எழுதுங்க ஸார்... அதோட நான் சொன்ன ரெண்டு பேரையும் உள்ள தள்ள உங்களால முடிஞ்சதப் பண்ணுங்க ஸார்" என்றான்.

மார்க்கண்டன் அவனைப் பார்த்துத் தலையாட்டினான். அவன் நகர... கட்டிலில் படுத்திருந்த அவர்களைப் பார்த்துக் கொண்டே நின்றான். அநேகமாக அனை வரது தலைமாட்டிலும், பெண்கள், கவலை முகத்தோடு, மனைவி, அம்மா.

பாவமாக இருந்தது.

இதை எழுத வேண்டும், அதோடு கலெக்டரை நேரில் சந்தித்து, இது பற்றிச் சொல்ல வேண்டும், என்று நினைத்துக் கொண்டான்.

அங்கிருந்து நகர்ந் தான். வெளியில் வர முயற்சி செய்தபோது, அவர்கள் கூட்டமாக உள்ளே ஓடினார்கள். சத்தம் போட்டபடி டாக்டர்கள் இருந்த அறைக்குள் நுழைந்தார் கள். அடுத்த நிமிடம், டாக்டர்கள் அனை வரும் வெளியில் வந்தார்கள். கூட்டத்தைப் பார்த்து சத்தம் போட்டார்கள். பதிலுக்குக் கூட்டம் டாக்டர்களை நோக்கி ஆவேசமாய் முன்னேறிற்று. கூட்டத்தில் ஒரு பகுதியினர் முன்னேறியவர்களைத் தடுத்து நிறுத்தினார் கள்.



இந்தப் பொடிசு யாரென்று தெரி கிறதா? சேவாக், கங்குலி, யுவராஜ்..? ஊஹூம்! அப்போது பேட்டை பிடித்துக் கொண்டிருந்தாலும் இப்போது பந்தைப் பிடித்துக் கொண்டிருக்கும் ஜாகீர் கான்தான் இந்த பேபி!

"எங்களை அட்மிட் பண்ணி எட்டு மணி நேரம் ஆச்சு. இன்னும் ஒழுங்கான ட்ரீட் மெண்ட் தரலை... இன்னும் ஒரு மணி நேரம் பார்ப்போம். எங்களை கவனிச்சாகணும். இல்லை... ஒரு டாக்டரும் வீடு திரும்ப முடி யாது" ஒருவன் கத்தினான்.

"அறுபது பேர் படுகாயத்தோட அட்மிட் ஆகியிருக்காங்க. நாங்க ஏழு டாக்டர்ஸ்தான் இருக்கோம். ஏற்கெனவே இங்க இருக்கிற பேஷண்டையும் கவனிக்கணும். உங்களை யும் பார்க்கணும். கொஞ்சம் பொறுமையா இருங்க. சாயங்காலம் மெடிக்கல்லேந்து எட்டு டாக்டர்ஸ் வராங்க... எல்லாம் சரியா யிடும்..." ஒரு டாக்டர் அவர்களைச் சமாதா னப் படுத்தினார்.

அதைக் காதில் வாங்கவில்லை அவர்கள். அசிங்கமாகப் பேசினார்கள். 'உங்களையெல் லாம் உதைச்சா ஒழுங்காயிடுவீங்க' என்றார் கள். 'உங்களையும் இதமாதிரி வெட்டிப் போடணும்' என்றான் ஒருவன்.

மார்க்கண்டனுக்கு எரிச்சல் வந்தது. இது அயோக்கியத்தனம் என்று நினைத்தான். நகர்ந்து வெளியே வந்தான்.

"பாவிங்க... பாவிங்க..." அந்தக் கிழவி வாசலில் நின்றபடி சத்தம் போட்டுக் கொண்டிருந்தது. யாரைத் திட்டுகிறாள் என்று புரியவில்லை அவனுக்கு.

"யாரைத் திட்டற பாட்?" என்றான்.

"மேல்திட்டுக்காரனுவோளத்தான்... என்ன திமிரு இருந்தா ஒண்ணுமே இல்லாத பிரச்னைக்காக ஒருத்தனுக்கொருத்தன் வெட்டிக்கிட்டு வந்து நிப்பானுவோ... இவனுங்க கொழுப்பு... இங்க வந்து டாக்ட ரைத் திட்டறானுவோ"" என்றாள்.

"நீ ஏன் பாட்டி இங்க நிக்கிறே?" மார்க் கண்டன் கேட்டான்.

அவள் மார்க்கண்டனை மேலும் கீழு மாய்ப் பார்த்தாள். "ரெண்டு பேரனு வோளும் இங்கதானே படுத்திருக்கானுவோ... ஒருத்தனுக்குக் கை தனியா வந்துட்டு. இன் னொருத்தனுக்கு மண்டையில வெட்டு. ஜூலை மாசம் நடந்த பிரச்னையில பையன் போய்ட்டான். இப்ப இவனுங்க... ஐயனாரப்

பாதான் என் குடும்பத்தைக் காப்பாத்தனும்" என்றாள்.

"நல்லது நடக்கும் பாட்டி" என்றான்.

"யார் தம்பி நீ?"

"பத்திரிகைக்காரன் பாட்டி... பேப்பர் வருதுல்ல... அதுல எழுதறவன்."

"எல்லாத்தையும் விவரமா எழுதுப்பா... உன்னால ஒரு நல்லது நடந்தா சரி..."

"நிச்சயமா பாட்டி. எழுதறதோட மட்டும் இல்லை... கலெக்டர்கிட்ட உங்க கிராமத்துப் பிரச்னையைப் பத்திப் பேசப் போறேன்..." என்றான் மார்க்கண்டன்.

கலெக்டர் அலுவலகத்தில் கூட்டம் இருந்தது. மார்க்கண்டன் காத்திருந்தான். அப்போதுதான் அந்தக் கிழவியைப் பார்த்தான். இரண்டு தினங்களுக்கு முன் ஆஸ்பத்திரியில் பார்த்தவள். வெட்டுப்பட்ட மகன்களை ஆஸ்பத்திரியில சேர்த்துவிட்டு, தவிப்பாய் நின்று கொண்டிருந்தவள். இவன் அந்தக் கிழவியைப் பார்த்துக் கொண்டிருந்த போது... அவள் அருகே வந்தாள்.

"கலெக்டர் துரையப் பார்க்கணும் தம்பி... இப்ப முடியுமா? இவ்வளவு கூட்டம் இருக்கே..." என்றாள். குரலில் கூட்டத்தைப் பார்த்து மிரண்டு போன தன்மை தெரிந்தது.

"பாட்டி என்னை ஞாபகம் இருக்கா...?" என்றான் அவளிடம்.

"யாரு தம்பி...?" கண்களை இடுக்கிக் கொண்டு பார்த்தாள். அவனை அடையாளம் கண்டு கொள்ள முயற்சி செய்து தோற்றாள்.

"அன்னைக்கு ஆஸ்பத்திரியில பார்த்தியே, பேப்பர்காரன்... உங்க ஊர் பிரச்னைய கலெக்டர்கிட்ட பேச வந்திருக்கேன்.... இன்னைக்குப் பார்த்திடுவேன்."

"ஆமாமாம்.... இப்ப ஞாபகம் வருது... நான் கூட அதுக்குத்தான் வந்திருக்கேன் தம்பி..."

"அட!" என்றான் வியப்பாய்.

"நீ என்ன பாட்டி அவர்கிட்ட சொல்லப்போறே...?" ஆர்வமாய்க் கேட்டான்.

"மேல்திட்டுல ஒரு பள்ளிக் கூடம் இருந்துச்சுப்பா.... இவனுவோ வசதிக்காக வர்ற வாத்தியாரை பயமுறுத்தி மிரட்டி அனுப்பிடறானுவோ... பள்ளிக்கூடத்துல சீட்டுக்கட்டு விளையாடறானுவோ... சாராயம் குடிக்கிறானுவோ... அதனால பள்ளிக் கூடம் மூடியே கிடக்கு... அந்தப் பள்ளிக் கூடம் நடக்கணும்... நல்ல வாத்தியாரா நிரந்தரமாப் போடணும்... அதைத்தான் சொல்லப் போறேன்.... படிக்கணும்னா மணல்மேல்குடி போகணும்... அதனால் பல பேர் பள்ளிக்கூடம் பக்கமே போறதில்லை... நாலு எழுத்து படிச்சாத்தானே புத்தி வளரும்... கண்டதுக்கும் அரிவாளை தூக்கத் தோணாது... யாராச்சும் இதைச் செய்வாங்கன்னு எதிர்பார்த்துக்கிட்டு இருந்தேன். ஊர்க்காரனுவோகிட்டயும் பல தடவை சொல்லி இருக்கேன். யாரும் செய்யலை. நாமே செய்வோமேன்னு கிளம்பி வந்துட்டேன்... எனக்குத்தான் ஆறாத சோகம்..." என்றவள், "ஆமாம் நீ கலெக்டர்கிட்ட என்ன சொல்லப் போறே?" என்றாள்.

மார்க்கண்டனுக்கு பளிச்சென்று யாரோ கன்னத்தில் அறைந்தது போலிருந்தது. யோசித்தான். போலீஸ் ஸ்டேஷன், அவுட் போஸ்ட்... இரண்டு பேரை போலீஸ் கஸ்டடிக்குக் கொண்டு வந்து மிரட்டி... இது தற்காலிகத் தீர்வுதான். ஆனால் நிரந்தர தீர்வென்பது பள்ளிக்கூடம்தானே!

கிழவியைப் பார்த்துச் சிரித்தான்.

"பள்ளிக்கூடம் திறக்கணும். அதுவும் நல்லதுதான். ஆனா மறுபடி உடனே பிரச்னை வரக்கூடாதுல்ல... அதுக்காக சில நடவடிக்கைகள் எடுக்கணும். அதுபத்தி கலெக்டர்கிட்ட பேசப் போறேன். வா நிழல்ல அப்படிப் போய் உட்காரலாம்... நான் உன்னை கலெக்டர்கிட்ட அழைச்சுட்டுப் போறேன்..." என்றான்.

கிழவி அவனைப் பார்த்து வெள்ளந்தியாய்ச் சிரித்தது. ஏனோ மார்க்கண்டனுக்கு உற்சாகமாய் இருந்தது. ○



"அந்த ஓட்டல்ல் சிறப்பம்சம் வீட்டுச் சாப்பாடு மாதிரியே இருக்கும்னு சொல்றாங்களே, நிஜமாவா?"

"நிச்சயமா! முணுமுணுத்துக்கிட்டே பாத்திரங்களை 'ணங்'னு வச்சுட்டுதான் சாப்பாடு போடுவாங்க!"

— நெ. ராமன்





# ஜூலி கணபதி

குளிரக் குளிர நனைகிறேன்
மழையில்...
இனி வராமலே போய்விடலாம்
இப்படியொரு மழை!

- என்ற மகுடேஸ்வரனின் சிறு கவிதை உணர்த்தும், அபூர்வத் தன்மையோடு வந்திருக்கும் மைல் கல் படம்.

வேறொரு மொழியில் சொல்வதென்றால், துருப்பிடித்து 'தூள் தூளாய்' உதிரத் தொடங்கியிருக்கும் தமிழ் ரசனையைத் தங்கமாய் மாற்ற நினைக்கும் ரசவாத முயற்சி.

கதாநாயகன் அடிவாங்கலாம், கொஞ்சமாய் இரத்தம் சிந்தலாம். ஆனால் படுத்த படுக்கையாய், பெட்பேனை நம்பியிருக்கும் கையாலாகாத நிலையில் காட்ட, தைரியமிருக்கிறதா? பிஃப்டிகேஜி தாஜ்மஹால்களை (?) நம்பி, பிலிம் காட்டுகிற தலைமுறைக்கு மத்தியில், நூறு கிலோ எடை கொண்ட பெண்ணை, கதாநாயகியாகக் காட்ட முடியுமா? முடியும் என்று காட்டியிருக்கிற பாலு மகேந்திராவின் வளைந்து கொடுக்காத துணிச்சலை வணங்கலாம்.

உயிரும் மெய்யுமான உரிமையில் கணவனை ஒருமையில் அழைக்கிற அன்பு மனைவி, "சிட்டே சிட்டே பறந்து வா!" எனத் தமிழ் ரைம் பாடிக்காட்டுகிற பாசமகள், அப்புறம் தமிழ்ப் பெண்களை வசியப்படுத்தி வைத்திருக்கும் நம்பர் ஒன் டீ.வி. தொடரான 'கங்கா'. இதுதான் நாடறிந்த எழுத்தாளரான தென்காசி பாலகுமாரனின் உலகம்.

தமது தொடரின் இறுதிப் பகுதியை எழுதி முடிக்க உதகையை ஒட்டிய மேல்மலையனூரில் தங்குகிறார். வேலை முடிந்ததும் சென்னை திரும்ப, கொட்டும் மழையில் தமது காரில் மலையிறங்கும்போது திடீர் விபத்து!

நல்ல வேளையாக எழுத்தாளரின் தீவிர ரசிகை ஜூலி கணபதி அவரைக் காப்பாற்றி தமது வீட்டிலேயே சிகிச்சை அளிக்கிறார். தமது நன்றியின் பிரதிபலிப்பாக கங்கா தொடரின் இறுதி எபிசோடுகளை திரையில் வரும் முன்பே ஜூலிக்குப் படிக்க கொடுக்கும் பாலகுமாரனுக்குப் பேரதிர்ச்சி. காரணம் தன்னைத் தீவிரமாய்க் காதலிக்கும்

'ஜூலி கணபதி' ஒரு மனச்சிதைவு நோயாளி என்பதும், ஜூலியின் அபாயகரமான பொஸசிவ் சிறையில் சிக்கிக் கொண்டிருப்பதும் தெரிய வருகிறது. அந்த முரட்டு மனுஷியிடமிருந்து எழுத்தாளர் மீண்டு வர முடிந்ததா? என்பதை ஆல்பிரட் ஹிட்ச்காக்கிற்கு இணையாகச் சொல்லியிருக்கிறார் இயக்குனர்.

அப்படியானால் இது வெறும் திரில்லர் படமா?

இல்லை, உலகமயமாதலுக்குப் பிறகான, தமிழ் அடையாளம் என்று கொள்ளத்தக்க, டீ.வி மெகா தொடர் மயக்கத்தை மறைமுகமாகத் தாக்கும் திரைக்கதை.

மூலக்கதை ஆங்கில எழுத்தாளர் எஸ்தோப்பினுடையது என நேர்மையாய் ஒத்துக்கொண்டு, ஸ்டெதஸ்கோப் இல்லாமலேயே, நமது நாடித் துடிப்பை உணரவும் உறையவும் வைக்கும், இம்மி கூட லாஜிக் இடிக்காத காட்சி அமைப்புகள், என நல்ல ஹாலிவுட் கதைப் படங்களை நினைவு படுத்துகிறது.

தமது உணர்வுகள் சீண்டப்படும்போது மட்டும் மனச்சிதைவு தீவிரமடையும் ஜூலிகணபதிதான் படத்தின் முதன்மை பாத்திரம். கற்பனையாக எழுதப்படும் கதையில்கூட பெண்ணுக்குத் தீங்கு வந்து விடக் கூடாது, என்று நினைக்கும் ஜூலி, மங்கா இறந்து விட்டதாகச் சொல்லும் ஸ்கிரிப்ட் பேப்பரைக் கொளுத்தும்படி எழுத்தாளரை மிரட்டும்போது, நமக்குப் பயமும் பரிதாபமும் கலந்த உணர்வு.

எதிர்விளைவுகளைப் பற்றி கவலைப்படாத, ஜீவன் மிகுந்த ஜூலி பாத்திரத்தின் ஏக்கங்களைக் கொச்சைப் படுத்தி விடாமல், கத்தி மேல் நடப்பது போல் கையாண்டிருக்கும் விதம், இலக்கிய இதம். நாம் குண்டாகி விட்டோமே என்று சரிதா துளிக் கூட வருந்த வேண்டிய அவசியமில்லை. அத்தனை பொருத்தமாய் ஜூலி கணபதியோடு ஒன்றி வாழ்ந்திருக்கிறார்.

அடுத்த நிலையில் எழுத்தாளர் பாலகுமாரனாக படுத்துக் கொண்டே நடித்திருக்கும் ஜெயராம், கமல் வரிசை நடிகர். அறைக்கதவின் லாக்கர் கைப்பிடி அசைகிறதா என்று அவர் வலியோடு கவனிக்கும் பாவம், அவரைப் பாவம் என்று சொல்ல வைத்து விடுகிறது!

கிளாமர் முத்திரையோடு வலம் வரும் ரம்யா கிருஷ்ணனை இதற்கு முன், இத்தனை அழகாய் யாரேனும் காட்டியிருக்கிறார்களா? சந்தேகம்!

இயற்கையாய்க் கிடைக்கிற பகல் வெளிச்சத்தில், நிஜ மழையில், தனித்துவமான குளோஸப் காட்சிகளில் ஒளிப்பதிவாளர் பாலுமகேந்திரா ஒருபடி உயர்ந்திருக்கிறார். மிக இயல்பாய்த் தொடங்கும் படம், மெல்ல மெல்ல தாவிச் சூடு பிடிப்பதில் எடிட்டர் பாலு மகேந்திராவும், பிரம்மாண்டமாய்த் தெரிகிறார்.

ஆனால் ரம்யா கிருஷ்ணனைத் தண்ணீரில் நனைய வைத்து



ஆடவிட்டிருக்கும் இடத்தில் சறுக்கியிருக்கிறார்.

இதயம் கவர்ந்த படைப்பாளிகளோடு பணியாற்றும்போது மட்டும், இளையராஜாவுக்குத் தனியொரு இசைமொழி வசப்பட்டு விடுவதை இந்தப்படமும் உறுதி செய்திருக்கிறது.

மூன்றாம் பிறை, மூடுபனி, அழியாத கோலங்கள், வீடு, மறுபடியும், வரிசையில், ஒரு படி உயர்ந்து நிற்கும் இந்தப்படம் புதிய இயக்குனர்களுக்கு ஒரு பள்ளிக்கூடம். ரசிகர்களுக்கோ இதமான ஒத்தடம்.

○ ஃபெயில் ○ ஜஸ்ட் பாஸ்
○ ஆவரேஜ் ○ அபவ் ஆவரேஜ்
● டிஸ்டிங்ஷன்

அலவன்ஸ் கிடைக்கிறது. இதற்கு அவர் கொள்ளுத்தாத்தா காலத்து விமானத்தில் நாற்பது குட்டிக்கரணம் (sorties) போட வேண்டும். அதாவது வரியைக் கழித்தபின் ஒரு சார்ட்டிக்கு ரூ. 25 ஆகிறது. அவர் இறந்தால் அவரது குடும்பத்திற்கு ரூ. 2 லட்சம் கிடைக்கும். இப்போது கிரிக்கெட் வீரர்களின் சம்பாத்தியத்தைக் கவனியுங்கள். மேன் ஆப் தி மேட்ச் 3000 பவுண்டுகள் அதாவது ரூ. 2 லட்சம். சரி, இதையும் கேளுங்கள். பீஹாரில் ஒருவர் 1001 தேங்காய்கள் உடைப்பதாக வேண்டிக் கொண்டிருக்கிறார். ஒரு புகழ் வாய்ந்த தொழிலதிபர் சித்தி விநாயகர் கோவிலில் அர்ச்சனை செய்து பிரசாதம் விநியோகிக்கிறார். குஜராத்தில் ஓர் இளைஞர் உண்ணாநோன்பு இருக்கிறார். இதெல்லாம் எதற்காக என்கிறீர்கள்? 18000 அடி உயரத்தில் பறக்கும்போது எப்போது வேண்டுமானாலும் எதிரிகளால் சுடப்படுவோம் என்று தெரிந்திருந்தும், தைரியமாகப் பறக்கும் நம் போர் வீரர்களுக்காகவா? இல்லை; உலகக்கோப்பை பந்தயத்தில் ஆடச் சென்றிருக்கும் கிரிக்கெட் வீரர்களுக்காக!



• இதை மட்டும் ஒழுங்கா பண்ணுங்க!

# ஆடறது கபடியில்லை!

யாஹூ மின் அஞ்சல் குழு ஒன்றில் கிரிக்கெட் பற்றி காரசாரமாக விவாதம். தோற்றுக் கொண்டேயிருக்கும் கிரிக்கெட் வீரர்கள் எப்படி எல்லையில் போர் செய்யும் வீரர்களை விட அதிகமாகச் சம்பாதிக்கிறார்கள் என்று விவரமாக ஒருவர் சங்கிலி அஞ்சல் அனுப்பியுள்ளார்.

''நியுஸிலாந்திடம் நாம் தோற்ற பின்பும் ஏதாவது மாயம் நிகழாதா என்று வாயைப் பிளந்து பார்த்துக் கொண்டிருக்கிறோம். இதே சமயம் எல்லையில் நம் வீரர்கள் பனியிலும் வெயிலிலும் வாடுகிறார்கள். உங்களுக்குத் தெரியுமா? ஒரு விமானப் படைலெப்டினென்ட்க்கு மாதம் ரூ. 1200 பறக்கும்

இந்த ரீதியில் எழுதிவிட்டு இவரும் விடவில்லை. கிரிக்கெட் வீரர்களிடம் ஒரு வேண்டுகோள் விடுக்கிறார்.

"தயவு செய்து பாகிஸ்தானிடம் மட்டும் தோற்று விடாதீர்கள். எப்படியாவது உலகக் கோப்பையை வென்று அந்தப் பணத்தை நம் எல்லை வீரர்களுக்கு நன்கொடையாகக் கொடுங்கள்'' என்கிறார்!

உலகக் கோப்பையில் இந்தியா ஆஸ்திரேலியாவிடம் படு தோல்வியடைந்ததை, மற்ற இணைய நண்பர்கள் எப்படி பந்தாடுகிறார்கள் என்று பார்க்க NDTVயின் தளத்திற்குப் (www.ndtv.com) போனேன். பலர் கங்கூலியைத் திட்டித் தீர்த்துள்ளனர். ஒருவர் விலாவாரியாக கங்கூலிக்கு அறிவுரை கூறுகிறார். "கங்கூலி, பேசாமல் யுவராஜையாவது, சேவாக்கையாவது ஓபனிங் பேட்ஸ்மேனாக விடுங்கள். பிறகு சச்சின், அதன் பின் நீங்கள், பிறகு டிராவிட், மோங்கியா எல்லோரும்."

இன்னொருவர் "அடப்பாவிங்களா... நாம் ஆடுவது கபடியில்லை. கிரிக்கெட்" என்று பொருமுகிறார். ஆனாலும் ஆங்காங்கே, "கவலைப்படாதீர்கள். 'சியர் அப்' போன்ற நல்ல வார்த்தைகளும் தென்படுகின்றன.

• அருணா ஸ்ரீநிவாசன்

# SRI SADGURU SABHA (REGD.) VEDA PADASALAI

**64 (Old No. 31), Subramaniam Street, West Mambalam, Chennai - 600 033.**

***Vedokilo Dharma Moolam! Vedo Rakshathi Rakshitham***
***Sri Sadguru Subha's humble request to our Asthika friends :***



Vedas are our Treasure and ever lasting. Even today our "bharath kandh" is so proud because of our Vedas which is a known fact to every one of us :

Every one of our duty is to learn and practice Vedas to attain eternal divine. Now-a days we could not learn and practice vedas due to various reasons and hence it is our endeavour to help by all means to those students who have shown vigour and will in learning Vedas, by doing such noble thing we can get the blessings of Vedamatha!! Under the guidance of his holiness Sri Sri Sri Kanchi Mahaswamigal the school is running for the past twelve years.

For this reason this Vedamatha Sabha is established and nearly 25 students are under going 'Gurukulavasa' after completing "Upanayana Karma".

For such students it is our bounden duty to provide facilities like clothes, Food, place to stay and learn; and other necessary facilities, to get the blessings of Vedamatha!!

We invite you all to our Sadguru Veda Patasala. In memory of our living diety Sri Kanchi Acharya's wish, we all have to implement "PIDI Arisi" scheme at our homes and your offerings must be offered in person to our Vedapatasala, twice in a month and get the blessings.

Please undertake 'Annadhana Samaradhana" on any day of your choice viz; Birth day, Wedding Day, Ancestor's Day or any other day, and get the blessings of the Almighty.

Patasala has decided to collect Rs. 1000 for a day's Annadhana expenses

Offering food to those students who learn veda is termed as "bikhsha", one day Sri Adhi Sankara came to a poor Lady's House and asked 'Bhavathe bhikhsha" one day and that poor lady could offer only 'Nellikani' Immediately Sri Adhi Sankarar chanted "Kanakadhara Sthothram' and gave her all good fortunes in her Life and this story is known to all of us.

Like wise for vedic students you offer 'bicksha' and this is not a "PITCHAI"

+++

Please deposit Rs. 10,000/- and we conduct Samaradha on any day of your choice out of the interest on the above deposit. Your co-operation for this noble cause is solicited.

Your Donations exempted under 80G

For further details please contact at the following address :

The Headmaster Sri Sadguru Sabha
Ved Bashya Vidwan T.S. BALA SUBRAMANYA GANAPATIGAL
64 (Old No.31), Subramayam Street, West Mambalam, Chennai - 600 033. Ph : 23710602
Awaiting your visit and response Sri Sadguru Sabha Veda Patasalai Director




# ஹன்ஸா நெஸ்ட் – நேர்த்தியாக வடிவமைக்கப்பட்ட ஃப்ளாட்டுகள் விலை ரூ.4.10 லட்சம் முதல்!*

- ஹன்ஸா நெஸ்ட், கிழக்குத் தாம்பரத்தில், பேருந்து மற்றும் ரயில் நிலையத்திற்கு அருகில், சங்கர வித்யாலயாவிற்குப் பின்புறம் அமைந்துள்ளது.
- 1, 2 மற்றும் 3 படுக்கையறை ஃப்ளாட்டுகள் பிரத்யேக கீழ்த்தளம் + முதல் தளம் மட்டும்.
- 450-1,081 சதுர அடி
- செராமிக் டைல் ஃப்ளோரிங்
- சமையலறை : கிரானைட் பிளாட்ஃபார்ம் மற்றும் ஸ்டெயின்லஸ் ஸ்டீல் சின்க்.
- சிறந்த பள்ளிகள்/கல்லூரிகள் மற்றும் மருத்துவமனைகளுக்கு அருகில்
- பாரிமுனை, அண்ணா சாலை, தி.நகர், வேளச்சேரி, அடையாறு மற்றும் மயிலாப்பூருக்கு நேரடிப் பேருந்து வசதி.

**ஹன்ஸா நெஸ்ட் அமைவிடம் :** புதிய எண்.55, பழைய எண் 12C, மணிமேகலை தெரு, கிழக்கு தாம்பரம், சென்னை-600 059.

## ஹன்ஸா கார்டனில் சில ஃப்ளாட்டுகளே உள்ளன.




**விலை ரூ.3.45 லட்சம் முதல்.***

**ஹன்ஸா கார்டன் அமைவிடம்: மாடம்பாக்கம் பிரதான சாலை, ராஜகீழ்ப்பாக்கம், வேளச்சேரி-தாம்பரம் சாலையில், சேலையூர் அருகில், சென்னை.**

*வரிகள் மற்றும் கட்டணங்கள் நீங்கலாக.*



## ஹன்ஸா எஸ்டேட்ஸ் பிரைவேட் லிமிடெட்

4ஆம் தளம், கில்ராஜ் எஸ்டேட்ஸ், 624, அண்ணா சாலை, சென்னை-600 006.
போன்: 28292315/3135/2323 E-mail: hansaestates@vsnl.com

2778

# சிவகாமியின் சபதம்

நாற்பத்தைந்தாம் அத்தியாயம்

## மகேந்திரர் அந்தரங்கம்


ன்றிரவு மகேந்திர பல்லவரும் அவருடைய பட்ட மகிஷி புவன மகாதேவியும் கண்ணுறங்கவேயில்லை.

அரண்மனை மேல் மாடத்தில், வெள்ளி நட்சத்திரங்களை அள்ளித் தெளித்திருந்த வானவிதானத்தின் கீழ் அமர்ந்து, சென்ற காலத்தையும் வருங் காலத்தையும் பற்றி, அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள்.

''தேவி! என் வாழ்நாளின் இறுதிக் காலத்தில் இப்படி எனக்கு ஆசாபங்கம் உண்டாகுமென்று நான் எதிர்பார்க்கவேயில்லை. என்னுடைய கனவுகளெல்லாம் சிதைந்து போய்விட்டன. துரதிர்ஷ்டத்துக்கு உள்ளானவனை அவனுடைய அந்தரங்க சிநேகிதர்கள் கூடக் கைவிட்டு விடுவார்கள் என்று அரசியல் நீதி கூறுவது எவ்வளவு உண்மை! அதோ வானத்தில் ஜொலிக்கும் நட்சத்திரங்கள் முன்னே யெல்லாம் என்னைப் பார்த்து, ''மகேந்திரா! உன்னைப் போன்ற மேதாவி இந்தப் பூவுலகில் வேறு யார்? உன்னைப் போன்ற தர்மவான், குணபரன், சத்ருமல்லன், கலைப்பிரியன் வேறு யார்?" என்று புகழ் மாலை பாடுவது வழக்கம். இப்போது அதே நட்சத்திரங்கள், என்னைப் பார்த்துக் கண்ணைக் சிமிட்டிக் கேலிச் சிரிப்புச் சிரிக்கின்றன. 'மகேந்திரா! கர்வபங்கம் போதுமா? உன்னுடைய அகட விகட சாமர்த்தியங்கள் எல்லாம் விதியின் முன்னால் பொடிப் பொடியாகப் போனதைப் பார்த்தாயா?' என்று கேட்கின்றன...''

மகேந்திரருடைய உடம்பும் உள்ளமும் வெகுவாக நொந்திருந்தன என்பதைச் சக்கரவர்த்தினி அறிந்தவளாதலால், அவர் மனத்தை மேலும் புண்

**அமரர் கல்கி**

படுத்த விரும்பவில்லை. ஆயினும் அவளை அறியாமல் இந்த வார்த்தைகள் வெளிவந்தன. "பிரபு! நாமாகச் செய்து கொள்ளும் காரியத்துக்கு விதி என்ன செய்யும்?"

இதைக் கேட்ட மகேந்திர பல்லவர் சோகப் புன்னகை புரிந்து, "மனிதர்களாகிய நாம் எவ்வளவு சாமர்த்தியமாகக் காரியம் செய்தாலும் விதி வந்து குறுக்கிட்டு எல்லாவற்றையும் கெடுத்து விடத்தான் செய்கிறது. என்னுடைய காரியங்களைக் கெடுப்பதற்கு விதியானது சிவகாமியின் ரூபத்தில் வந்தது!" என்றார்.

"ஆ! அந்த ஏழைப் பெண்ணின் மீது ஏன் பழியைப் போடுகிறீர்கள்? அவள் என்ன செய்வாள்?" என்று இரக்கம் ததும்பிய குரலில் கூறினாள் பல்லவர் தலைவி புவன மகாதேவி.

"பெண்ணுக்குப் பெண் பரிந்து பேசுகிறாய். அது நியாயந்தான். ஆனாலும், ஆயனர் மகளின் காரணமாகத்தான் என்னுடைய உத்தேசங்கள் எல்லாம் பாழாய்ப் போயின. சிவகாமியிடமிருந்து மாமல்லனைப் பிரித்து வைக்க நான் முயன்று வந்தேன். அதற்காக என்னவெல்லாமோ சூழ்ச்சிகளும் தந்திரங்களும் செய்தேன். நான் செய்த சூழ்ச்சிகளும் தந்திரங்களும் பயன்படாமல் போயின. விதிதான் கடைசியில் வெற்றி பெற்றது."

'விதியானது உங்களுடைய நோக்கத்தைத்தானே நிறைவேற்றி வைத்தது? அந்தப் பெண்ணிடமிருந்து மாமல்லனைப் பிரிப்பதற்குத் தாங்கள் எத்தனையோ ஏற்பாடுகள் செய்தீர்கள். விதி உங்கள் ஒத்தாசைக்கு வந்து அவளை வாதாபிக்கே கொண்டு போய்விட்டது. அப்படியிருக்க, அவளைத் தேடி அழைத்துக் கொண்டு வருவதற்கு நீங்கள் ஏன் பிரயத்தனம் செய்ய





வேண்டும்? தங்களுடைய காரியம் எனக்கு விளங்கவில்லையே?" என்று புவன மகாதேவி உண்மையான திகைப்புடன் கேட்டாள்.

"அதைத்தான் அப்போதே சொன்னேன். பழைமையான பல்லவ குலத்திலே பிறந்ததற்குத் தண்டனை இது. சிவகாமியைத் திருப்பிக் கொண்டு



வராவிட்டால் பல்லவ குலத்துக்கு என்றென்றைக்கும் மாறாத அவமானம் ஏற்படும். புலிகேசி காஞ்சிப் பல்லவனை முறியடித்துவிட்டு ஊர் திரும்பியதாகப் பெருமையடித்துக் கொள்வான். சிவகாமி வாதாபியில் இருக்கும் பட்சத்தில் புலிகேசியின் ஜம்பத்தையே உலகம் நம்பும்படி இருக்கும். சிவகாமியின் புகழ் ஏற்கெனவே இலங்கை முதல் கன்யாகுப்ஜம் வரையில் பரவியிருக்கிறது. மாமல்லபுரத்துச் சிற்பங்களையும், சிவகாமியின் நடனத்தையும் வந்து பார்த்து விட்டுப் போக வேண்டுமென்று நானே ஹர்ஷவர்த்தனருக்கு ஓலை அனுப்பியிருந்தேன். அப்படிப்பட்ட சிவகாமி வாதாபியில் சிறை வைக்கப்பட்டிருந்தால் உலகம் என்ன நினைக்கும்? பல்லவ குலத்துக்கு அதைக் காட்டிலும் வேறு என்ன இழிவு வேண்டும்?''

''சுவாமி! தாங்கள் தலையில்

## அருள்வாக்கு!



அநேக ஸமயாசாரங்களை, சடங்குகளை சீர்திருத்தக்காரர்கள் ஒதுக்குவதற்கு சுலபமாக ஒரு காரணம் சொல்லி விடுகிறார்கள்: "மனஸு சுத்தமாக இருக்க வேண்டியதுதானே முக்யம்? 'ரிசுவல்' எதற்கு? இந்த 'ஃபார்மாலிடீஸ்' எதற்கு?" என்கிறார்கள்.

மனஸைத் தனியாக விட்டால், அது கட்டுப்படாமல் கெட்ட வழிகளில்தான் போய்க் கொண்டிருக்கும். எவனாவது ஆயிரம், பதினாயிரத்தில் ஒருத்தனுக்குத்தான் காரியத்தில் போகாதபோதும் மனஸ் கட்டுப்பட்டு, நல்வழியிலேயே போய்க் கொண்டிருக்கும். மற்றவர்களுக்கு ஒரு காரியத்தைக் கொடுத்து, 'காரியத்வாரா' மனஸை பகவானிடமோ, ஜனஸேவையிலோ திருப்பி விட்டால்தான் உண்டு. இதைக் கவனித்துத்தான் ஆசார அநுஷ்டானங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன.

மனஸைத் தனியாக விட்டால் என்று மட்டுமில்லை; அதை நாம ஜபம், ஸ்தோத்ரம் என்று வாக்குடன் சேர்த்து விட்டாலுங்கூடக் கொஞ்ச நேரத்துக்கு அப்புறம் அது பிய்த்துக் கொள்கிறது. அதனால், மனோ - வாக் - காயம் என்றபடி, மனஸை வாக்கு மட்டுமின்றி, சரீர கார்யத்தோடும் பிணைத்தே சடங்குகளைக் கொடுத்திருக்கிறது. மந்த்ரங்களை வாக்கால் சொன்னபடியே ஹோமம் என்ற கார்யத்தைப் பண்ணுவது; ஸஹஸ்ரநாமத்தை வாக்கால் சொன்னபடியே அர்ச்சனை என்ற கார்யத்தைப் பண்ணுவது - என்று வைத்திருக்கிறது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

அணியும் கிரீடத்தைச் சில சமயம் நான் கையிலே எடுத்துப் பார்த்திருக்கிறேன். அதனுடைய கனத்தை எண்ணி, 'இவ்வளவு பாரத்தை எப்படித்தான் சுமக்கிறீர்களோ' என்று ஆச்சரியப் பட்டிருக்கிறேன். ஆனால், இந்த இரண்டு மூன்று வருஷத்திலேதான் எனக்குத் தெரிந்தது, தலையிலே அணியும் மணிமுடியைக் காட்டிலும் ஆயிரம் மடங்கு பாரத்தைத் தாங்கள் இருதயத்திலே தாங்க வேண்டியிருக்கிறதென்று. 'இராஜ்ய பாரம்' என்று உலக வழக்கிலே சொல்வது எவ்வளவு உண்மையான வார்த்தை?'' என்று சக்கரவர்த்தினி உருக்கமான குரலில் கூறினாள்.

''ஒரு காலத்தில் அந்த பாரத்தை நான் வெகு உற்சாகத்துடன் தாங்கினேன். இப்போது அதுவே தாங்க முடியாத பெரும் பாரமாய் என் இருதயத்தை அமுக்குகிறது. தேவி! மூன்று வருஷத்துக்கு முன்பு வரையில் நான் ஆகாசக் கோட்டைகள் கட்டி வந்தேன். ஆம்; காஞ்சிக் கோட்டையை அலட்சியம் செய்துவிட்டு ஆகாசக் கோட்டைகள் கட்டினேன். இந்தப் பூவுலகத்தைச் சொர்க்க பூமியாகச் செய்துவிடலாம் என்று கருதினேன். என்னுடைய மூதாதையர்களையெல்லாம் மனத்திற்குள் நிந்தித்தேன். வீணாகச் சண்டை பூசல்களிலும் இரத்தக் களறிகளிலும் அவர்கள் காலத்தைக் கழித்தார்களே என்று வருத்தப்பட்டேன். மாமல்லபுரத்தில் எல்லாச் சமயங்களுக்கும் அழியாத கற்கோயில்கள் கட்டத் தொடங்கினேன். கோயில்கள் கட்டி முடிந்ததும் ஹர்ஷனையும் புலிகேசியையும் அழைக்க நினைத்திருந்தேன். இந்த ஆகாசக் கோட்டைகளையெல்லாம் அந்தச் சளுக்க அரக்கன் பொடிப் பொடியாக்கி விட்டான். அவன் தொண்டை மண்டலத்துக் கிராமங்களில் வைத்த தீ சீக்கிரத்தில் அணையப் போவதில்லை. பல்லவர் படை வாதாபிக்குப் போய்ப் புலிகேசியை முறியடித்தாலொழியப் பல்லவ குலத்துக்கு நேர்ந்த அவமானம் தீரப் போவதில்லை. இது என் காலத்தில் நிறைவேறாவிட்டால், மாமல்லனுடைய காலத்திலாவது நிறைவேறியாக வேண்டும்.''

''பிரபு! என் வீர மகன் நிச்சயமாகத் தங்கள் மனோரதத்தை நிறைவேற்றுவான். பல்லவ குலத்துக்கு நேர்ந்த பழியைத் துடைப்பான்!'' என்று புவன மகாதேவி பெருமிதத்துடன் கூறினாள்.

(தொடரும்)



• பிரகாஷ் டீம்

**வெ**றும் முப்பத்தாறு அங்குல நீளம் தான். டீம் லீடர் பிரகாஷ், கையிலிருந்த ரிமோட்டை இயக்கினார். அடுத்த வினாடி அதன் மூக்கிலிருந்த புரொபெல்லர் விசிறி விஷ்க்... விஷ்க்.. என்று உயிர்பெற்று வேகமாய்ச் சுற்றத் தொடங்கியதும் 'ஹேய்..' என்று உற்சாகமாய்க் குரல் கொடுத்தனர் அங்கே கூடியிருந்த மாணவர்கள்.

பக்கா ஓடுதளம் என்று சொல்வதற்கில்லை. ஒரு சின்ன தார் சாலையில் ஐம்பதடி தூரம், தனது சக்கரக் கால்களால் மெள்ள மெள்ள நகர்ந்த, அந்தக்



# கண்ணி வெடிகளைத் தேடும் கன்னியர்!

குட்டி கிளைடர் விமானம், கண் இமைப்பதற்குள் உம்ம்ம்... என்ற மெல்லிய ஒலியோடு மேலே எழுந்து பறக்கத் தொடங்கியது. அரை நிமிஷம் கூட ஆகி இருக்காது. நம் கண்களில் இருந்து முற்றாக மறைந்தே போனது. பிரகாஷ் ரிமோட்டிலிருந்த வேறொரு விசையை அழுத்த, அடுத்த அரை நிமிஷத்தில், உம்ம்ம்... ஓசையோடு நமது தலைக்கு மேலிருந்து காற்றைக் கிழித்தபடி செங்குத்தாய் இறங்கியது. எங்கே தரையில் மோதி மூக்கை உடைத்துக் கொள்ளுமோ, என்று நாம் பயந்தால், ஓடு தளத்தில் பக்குவமாய்த் தரையிறங்கி, ஒரு சின்ன அரைவட்டம் போட்டு நின்று கொள்ள, கரவொலியில் கண்காட்சி வளாகமே அதிர்ந்தது.

இண்டஸ்ட்ரியல் மேனுபேக்சரர்ஸ் அசோசியேஷனும் (இன்மா), சென்னை தாம்பரத்தை அடுத்த வண்டலூரிலுள்ள கிரசண்ட் பொறியியல் கல்லூரியும் இணைந்து, கல்லூரி வளாகத்திலேயே நடத்திய மூன்று நாள் தொழிற் கண்காட்சியில் தான் இந்தக் குட்டி விமானம் வானில் வலம் வந்தது. 'இன்மா 2003' என்று பெயரிடப்பட்டிருந்த இந்தத் தொழிற்காட்சியில் மொத்தம் முப்பத்து இரண்டு நிறுவனங்களும், ஏழு பொறியியல் கல்லூரிகளும் கலந்து கொண்டு, தங்கள் தயாரிப்புகள், சேவைகள், புதிய கண்டுபிடிப்புகளைக் காட்சிக்கு வைத்திருந்தனர். குறிப்பாக, ஏழு பொறியியல் கல்லூரிகளில் இருந்து இருபத்து இரண்டு புதிய கண்டுபிடிப்புகளை, இறுதியாண்டு பொறியியல் படிக்கும் மாணவர்கள் மிகுந்த ஆர்வத்தோடு காட்சிக்கு வைத்திருந்தனர்.

'இன்மா' அமைப்பின் சார்பில் அதன் தலைவர் என்.எஸ். குணசேகரன், செயலாளர் வி. எஸ்.தியாகராஜன், கிரசண்ட் கல்லூரியின் டீன் முனைவர் தியாகராஜன், உள்ளிட்டோர் அடங்கிய சிறப்புக் குழு, சிறந்த மூன்று கண்டுபிடிப்புகளைத் தேர்வு செய்து விருதுகளை அறிவித்தது. தேர்வில் முதலிடத்தைப் பிடித்துக் கொண்டது கிளைடர் விமானம்.

**செ**ன்னை பெருங்களத்தூரை அடுத்த திருவனஞ்சேரியில் உள்ளது ஜி.கே.எம். பொறியியல் மற்றும் தொழில்நுட்பக் கல்லூரி. இங்கே மெக்கானிக்கல் என்ஜினியரிங் பிரிவில் இறுதியாண்டு பயின்று வரும் பிரகாஷ் தலைமையில் ரமேஷ், பியாஸ்கான், மோகன், கிரிதரன், பிரேம்குமார், அருணாசலம், அருண்குமார், ஆம்ஸ்டிராங் ஆகிய ஒன்பது மாணவர்கள் இணைந்து உருவாக்கியதுதான் இந்த கிளைடர் விமானம்!

வெறும் அறுநூற்று ஐம்பது கிராம் எடையில், ஒன்பது அங்குல உயரத்தில் இந்த விமானத்தை உருவாக்கியிருக்கிறார்கள் என்றால், இதன் உள்ளே இருக்கும் என்ஜின் எத்தனை சின்னதாய் இருக்கும்! நினைக்கவே ஆச்சர்யமாய் இருந்தது.


* முனைவர் தியாகராஜன்


* குணசேகரன்


* வி.எஸ். தியாகராஜன்

"எடை குறைவான ஒரு விமானத்தைத் தயாரிப்பது என்று முடிவு செய்ததுமே, நாங்கள் பால்சா மரத்தைத் தான் தேர்வு செய்தோம். எடைகுறைவான இந்த மரத்தை மைசூரிலிருந்து பலமுறை தருவித்தோம். காரணம், மூன்று முறை எங்கள் விமானம் விழுந்து நொறுங்கிவிட்டது!" என்கிறார் டீம் லீடர் பிரகாஷ். 3.5 சிசி திறன் கொண்ட இந்த விமானத்தின் குட்டியூண்டு என்ஜினை தங்கள் கல்லூரி ஆராய்ச்சிக் கூடத்திலேயே வடிவமைத்திருக்கும் இந்த மாணவர்கள் மண்ணெண்ணெயில், விளக்கெண்ணெய், ஈத்தர் ஆகிய எரிபொருட் களை 1 : 1 : 1 என்ற அளவில் கலந்து பயன்படுத்துகிறார்களாம். எரிபொருள் கொள் திறன் எவ்வளவாம்? வெறும் ஐம்பது மில்லிதான்.

கடந்த ஆண்டு ஜனவரி இருபத்தாராம் தேதி தங்கள் கல்லூரியின் குடியரசு தின விழாவில், தேசியக் கொடி கம்பீரமாய்ப் பறந்து கொண்டிருக்கும்போது, தங்கள் கண்டுபிடிப்பை வெற்றிகரமாகப் பறக்க விட்டிருக்கிறது இந்த மாணவர் குழு. சரி... சரி.. இந்தக் குட்டி விமானத்தை எதற்காக கண்டுபிடித்திருக்கிறார்கள்? பணக்கார வீட்டுப் பிள்ளைகள் ஜாலியாகப் பொழுது போக்குவதற்காகவா?

"எல்லைக் கட்டுப்பாட்டுக் கோட்டைக் கடந்து ஊடுருவும் தீவிரவாதிகளைக் கண்காணிக்கலாம்! புவியியல் ஆய்வுகளுக்குப் பயன்படுத்தலாம். இப்படி நிறைய. இது போன்ற ஆள் இல்லாத உளவு விமானங்களை இந்தியா இப்போது வெளிநாடுகளில் இருந்து அதிக விலை கொடுத்து வாங்கிக் கொண்டிருக்கிறது. எங்கள் விமானத்தை வெறும் இருபதாயிரம் ரூபாயில் உருவாக்கி விட முடியும்." என்று ஆச்சர்யப்படுத்துகிறார்கள் ஜி.கே.எம். பொறியியல் கல்லூரி மாணவர்கள்.

* எஸ்.எம்.எஸ். உருவாக்கிய மூவர்



கண்காட்சியில் இரண்டாவது இடத்தைத் தட்டி சென்றது, மேற்கு

* சந்தியா, மீரா டீம்



தாம்பரம் சாய்லியோ நகரில் உள்ள ஸ்ரீசாய் ராம் பொறியியல் கல்லூரி மாணவிகளான சந்தியா, மீரா ரிஸ்வி ஆகிய இருவரின் கண்டு பிடிப்பு. நிலக்கண்ணி வெடிகளைத் தேடிப் போய் முகர்ந்து கண்டுபிடிக்கும், ரோபோ வின் ப்ரோமாடலை உருவாக்கி இருக்கிறார் கள். எலக்ட்ரானிக்ஸ் அண்ட் கம்யூனி கேஷன் படிக்கும் இந்த இளம் கன்னியர், கண்ணி வெடிகளைப் பற்றிச் சிந்தித்திருப் பது ஆச்சர்யம் தானே?

"ஆந்திரா, ஒரிஸ்ஸா, பீகார், காஷ்மீர் ஆகிய மாநிலங்களில், தீவிரவாதிகளின் கண்ணி வெடிகளுக்குப் பலியாகும் பொது மக்கள், போலீசார், இராணுவ வீரர்களைப் பற்றிய செய்திகள் எங்களை உறுத்திக் கொண்டே இருந்தது. நமது பொறியியல் சிந்தனையோடு, மனித நேயத்தை ஏன் இணைத்துப் பார்க்கக் கூடாது என்று தோன் றவே, இந்த மைன் ஸ்வீப்பிங் ரோபோவுக் கான ஐடியா உதித்துவிட்டது" என்கிறார் சந்தியா. மிஸ்ரோ என்று பெயரிடப்பட் டிருக்கும் இந்த ரோபோ எப்படிச் செயல் படுகிறது?

"கண்ணி வெடிகளைக் கண்டுபிடிக்க, மோப்ப நாய்களையும், நிபுணர்களையும் பயன்படுத்துகிறார்கள். ரோபோக்களைப் பயன்படுத்த முடியுமா என்ற ஆராய்ச்சி, அமெரிக்காவின் நாசாவில் இப்போதுதான் நடந்து கொண்டிருக்கிறது. பொதுவாக ஒரு கண்ணி வெடியின் மீது குறைந்த பட்சம் இருபது கிலோ எடையுள்ள பொருளோ, உயிரினமோ ஏறி நின்று, விலகினால்தான் அது வெடிக்கும். எங்கள் ரோபோ 5.6 கிலோ எடை மட்டுமே கொண்டது. டி.என்.டி. அல் லது ஆர்.டி.எக்ஸ் வகை வெடிமருந்துகளைக் கொண்டு புதைக்கப்படும் கண்ணிவெடி எதுவாயினும், அவற்றிலிருந்து கண்ணுக்குப் புலப்படாத வாயுக்கள் வெளியேறிக் கொண்டே இருக்கும். எங்களது ரோபோவில் நாங்கள் பொருத்தியிருக்கும் காஸ் சென்சார் பகுதிகள், இப்படி வெளிவரும் வாயுக்களை நுகர்ந்து கண்ணிவெடிகளை அடையாளம் கண்டு, ரிமோட் முனைக்கு அடுத்த நொடியே அறிவித்து விடும். .004 சதவிகிதம் வாயு வெளியேறினாலே கண்டு பிடித்து விடும்" என்று சொல்லும் மீரா, உலகின் ஏதேனுமொரு பகுதியில் நிமிடத்திற்கு இருவர் கண்ணி வெடி மூலம் இறந்து போகி றார்கள் என்ற தகவலையும் தருகிறார்.

திருவள்ளூர் மாவட்டம் திருநின்றவூரில் உள்ள ஜெயா பொறியியல் கல்லூரி மாண வர்களான பரத், முத்துக்குமரன், செந்தில் நாதன் மூவரும் இணைந்து கண்டு பிடித் துள்ள புதிய முறை எஸ்.எம்.எஸ். தகவல் சேவைக்கு, மூன்றாவது பரிசு கிடைத்திருக் கிறது. செல்போன் நிறுவனங்கள் ரேடியோ அலைகளைப் பயன்படுத்தி, ஷார்ட் மேசே ஜிங் சர்வீஸ் என்ற எஸ்.எம்.எஸ். சேவையை வழங்கி வருகின்றன. ஆனால் இந்த மாண வர்கள் லேண்ட் லைன் தொலை பேசிக்கு எஸ்.எம்.எஸ். அனுப்பவும், அங் கிருந்தே பெறவுமான சாப்டுவேர் புரோ கிராமை உருவாக்கி அசத்தியிருக்கிறார் கள். கம்யூட்டரும் இண்டர்நெட்டும் இல்லாமலேயே, தொலைபேசி மூலம் மின்னஞ்சல் அனுப் பும் சேவையையும் இந்த சாப்டுவேர் மூலம் சாத்தியப் படுத்தியிருக்கிறார்கள்.

**ஸ்ரீ சக்கரம்**
படங்கள் : **டிஜிட்டல் சண்முகம்**










# கிரிக்கொட்டிப் போங்கு!






பாக். வீரராக இருக்கலாம். பச்சைக் கலர்ல பெப்ஸியே கிடையாதுன்னா நம்பணும்.



''இந்தப் போட்டி 'டை'யிலதான் முடியும்னு அவ்வளவு நிச்சயமா எப்படி சொல்றீங்க?''



வைட்தான். ஆனா இதுக்கு 2 ரன்கள் கொடுக்கறது கொஞ்சம் ஓவர்.
குல்லூ

# சாத்தான்குளம் தேர்தல் முடிவு என்ன சாதிக்கும்..?



● ஆர்.அப்துல் சலாம், திருச்சி - 21

? 'சாத்தான்குளம் இடைத் தேர்தலில் காங்கிரசின் வெற்றிக்காக உயிரைப் பணயம் வைக்கவும் நாம் தயாராக இருக்க வேண்டும்' என்கிறாரே இளங்கோவன்.

! ஆளுங்கட்சியினரும் தோழமைக் கட்சியினரும் அரங்கேற்றுகின்ற அடிதடி கலாட்டாக்களைப் பார்த்தால், இளங்கோவன் சொல்வது சரி என்றுதான் தோன்றுகிறது.

● எம்.இராஜேந்திரன், வால்குடி

? புதுச்சேரி - பாண்டிச்சேரி - எது கரெக்ட்?

! புதுச்சேரி தமிழில் கரெக்ட்; பாண்டிச்சேரி ஆங்கிலத்தில் கரெக்ட்: அரசு நிகழ்ச்சிக்கு சைக்கிளில் வந்து இறங்கும் முதல்வர் ரங்கசாமியின் போக்கு, எளிமைக்குக் கரெக்ட்.

● எஸ்.பாலசந்தர், திருவாரூர்

? காதல் திருமணம் ஒன்றுதான் நமது நாட்டில் ஜாதி - மத வேறுபாடுகளைக் களையும் கருவியாக இருக்க, காதலர் தின கொண்டாட்டம் தவறா...?

! காதலர் தினத்துக்கு நான் விரோதி அல்ல; ஆனால், ஜாதி மத வேறுபாடுகளைக் களைய காதல் ஒன்றுதான் வழி என்ற கருத்துக்கு விரோதி.

● என்.பாலகிருஷ்ணன், மதுரை - 1

? 'சுயநிதிப் பொறியியல் கல்லூரிகளில் தகுதியற்றவர்கள் பாடம் நடத்துகின்றனர்' என்ற அண்ணா பல்கலைக் கழகத் துணைவேந்தரின் குற்றச்சாட்டு குறித்து...?

! தகுதியற்றவர்கள் பாடம் நடத்துவது மட்டுமல்ல; தகுதியற்றவர்கள்தான் சில கல்லூரிகளையே நடத்துகிறார்கள் என்பது தினதயாள் கல்லூரியில் நிரூபணமாகியுள்ளது. துணை வேந்தர் குற்றம் சாட்டினால் போதாது; நடவடிக்கை எடுக்க வேண்டும்.

● எஸ்.சாந்தி, காட்பாடி

? மாவட்ட நலத் திட்டத் தொடக்க விழாக்களைத் திடீரென்று ஜெ. ஆரம்பிக்கக் காரணம்...?

! நலத் திட்டங்களை நிறைவேற்றுவது அரசின் கடமை. இதற்கெல்லாம் விழாக்களே தேவையில்லை. வரிப்பணம் வீண் செலவுதான். அதோடு "அரசு விழாவில் அரசியல் பேசக் கூடாது என்று தெரியும். ஆனாலும்..." என்று தொடங்கி கருணாநிதி அண்ட் கம்பெனியைத் திட்டித் தீர்ப்பது எதற்காக? நாடாளுமன்றத் தேர்தல் நெருங்குகிறதே, அதற்காகத்தான்!

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்

? இந்தியா முழுவதும் ஆண்டுக்கு இருபத்தி நாலாயிரம் கோடி ரூபாய்க்கு மின்சாரத் திருட்டு நடப்பதாகவும், மாநில அரசுகள் கவனமாக இருக்க வேண்டுமென்றும் பிரதமர் கூறியுள்ளாரே!

! புதிய செய்தியே அல்ல; மின் விநியோகத்தில் ஏற்படும் விரயம் அதனினும் அதிகம். இவ்விரண்டையும் குறைத்தாலே மின் கட்டணத்தையும் குறைத்து, பொருளாதார வளர்ச்சியை வேகப்படுத்தலாம்.

● கொ. மூர்த்தி, குட்டலாடம்பட்டி

? ஷேன் வார்ன், 'ஷேம்' வார்ன் ஆகிவிட்டாரே..?

! அதற்கு அவர் சிறுபிள்ளைத்தனமாக விளக்கம் தர முயன்றதுதான் இன்னும் ஷேம் ஆகிவிட்டது.

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்

? டான்ஸி பத்திரத்தில் நான் கையெழுத்திடவில்லை என்று ஜெயலலிதா நீதிமன்றத்தில் கூறிய பொய்க்கும் 'எம்ஜி.ஆர். குறித்து ராஜீவுக்கு நான் எழுதியதாகக் கூறப்படும் கடிதம், கருணாநிதியே தயாரித்த போலிக் கடிதம்' என்று ஈரோட்டில் கூறிய பொய்க்கும் என்ன வித்தியாசம்..?

! அண்டப் புளுகுக்கும் ஆகாசப் புளுகுக்கும் உள்ள வித்தியாசம்தான்!

● கு. கணேசன், மறைமலைநகர்

? 'சாத்தான்குளம் இடைத் தேர்தலில் காங்கிரஸை ஆதரித்தாலும் அக்கட்சித் தலைவர்களுடன் சேர்ந்து பிரசாரம் செய்ய

ரூ.100 பரிசு
பெறுபவர் :
**எஸ்.மகாலிங்கம்,**
மேலப்பாலையூர்,
குடவாசல்
(வழி) - 612 601



• எளிமையான உதாரணம்

***மாட்டோம்; தனி மேடையில்தான் பிரசாரம் செய்வோம்' என்று அறிவித்துள்ள கம்யூனிஸ்டுகளின் கொள்கைப் பிடிப்பு பற்றி...?***

! மக்களைக் குழப்புவதற்கு மேலாக இதன் மூலம் என்ன சாதிக்கப் போகிறார்கள்...? தி.மு.க. தனிப் பிரசாரம், கம்யூனிஸ்ட் தனிப் பிரசாரம் என்பதெல்லாம் நேர விரயம், பண விரயம், மனித சக்தி விரயம். ஒன்று சேர்ந்து அ.தி.மு.க.வை எதிர்த்து நிற்கத் தவறியது பெரும் பிசகு.

● **கோமதி சங்கர், சென்னை - 64**

***? நாம் அண்டை நாடுகள் எல்லாவற்றோடும் பிரச்னைகளை உண்டாக்கிக் கொண்டே போகிறோம் சரியா...?***

! சரிதான். சமீப சிக்கல் பங்களாதேஷுடன். அண்டை நாடுகளுடன் ஏற்படும் பெரிய பிரச்னைகளைக் கூட சாமர்த்தியமாகக் கையாள்வதன் மூலம் தீர்வை சுலப சாத்தியமாக்க வேண்டும். மாறாக, நாம் சிறிய பிரச்னைகளைக்கூட பூதாகார வடிவம் எடுக்கச் செய்கிறோம்.

● **வி. ஜானகி, சென்னை - 4**

***? பவானியின் குறுக்கே அணை கட்டுவதைப் பார்வையிடச் சென்றவர்கள் மீது கேரள போலீஸ் அடிதடி நடத்தியது சரிதானா...?***

! அல்ல; தமிழக விவசாயிகளும் பத்திரிகையாளர்களும் தாக்கப்பட்டது எக்காரணம் கொண்டும் நடந்திருக்கக் கூடாத தவறு. கேரளா - தமிழகமிடையே துவேஷமும் விரோதமும் வளர்க்கவல்ல தவறு.

● **கே. கணேசன், சென்னை - 5**

***? டிசம்பர் என்றாலே சங்கீதம் என்கிற மாதிரி, நாடகத்துக்காக ஒரு மாதத்தை ஏன் அறிவிக்கக் கூடாது என்கிறாரே ஒய்.ஜி.மகேந்திரன்?***

! அறிவிக்கலாம்; உலகத் தரத்துக்கு நமது இசை இருக்கிற மாதிரி நாடகக் கலையும் உயருமானால்!

● **பா. குணா, வயலூர்**

***? கை ரேகை சாஸ்திரம்மீது நம்பிக்கை உண்டா...?***

! சாத்தான்குளம் இடைத் தேர்தலில் காமராஜ் ஆட்சி அமைக்க அடித்தளம் போடப்படும் என்று சொல்லியுள்ள ஜி.கே. வாசன் அளவுக்குக் 'கை' ரேகை சாஸ்திரத்தில் அபார நம்பிக்கை இல்லை.

# நீங்கள் கேட்டவை - தராசு

• விபரீத விளக்கம்!

ரூ.75 சிறப்புப் பரிசு
பெறுபவர் :
**ஆர்.பிரகாஷ்,**
எஸ்.ஏ.ஓ. அலுவலகம்,
பொன்மலை,
திருச்சி - 620 004.



• கை, நம்பிக்கை!

● **எஸ்.மகாலிங்கம், மேலப்பாலையூர்**

***? சாத்தான்குளம் தேர்தல் முடிவினால் என்ன பாதிப்பு ஏற்படும்...?***

! 'ஆளுங்கட்சி ஜெயித்தால், மேஜையைத் தட்ட இன்னொரு எம்.எல்.ஏ. காங்கிரஸ் ஜெயித்தால் வெளி நடப்புச் செய்ய மேலும் ஒரு எம்.எல்.ஏ. அவ்வளவுதான். (இந்த பதில், வாசகர் பொன்மலை ஆர்.பிரகாஷ்★. எழுதிய 'வட்ட மேஜை' கடிதத்திலிருந்து 'சுட்டது'!)

# வந்தியத்தேவன் வழியிலே...

**ச**ரித்திர காலப் பயணமாகவே இருக்க வேண்டுமென்று குடந்தையைச் சுற்றியுள்ள சாலைகளும் நினைத்திருக்க வேண்டும். அனைவரும் குதிரை மீது பயணம் செய்யும் உணர்வை ஏற்படுத்தி, ஆயிரம் வருஷங்களுக்கு முன்னால் அழைத்துச் சென்றன அந்த ராஜபாட்டைகள்.

'பொன்னியின் செல்வன் சரித்திரம் நிகழ்ந்த இடங்களை நேரில் சென்று பார்க்க வருகிறீர்களா?' என்றொரு அழைப்பு வந்ததும், 'ஹை!... நாங்க ரெடி' என்று ஆர்வத்தோடு கூடினார்கள் நாற்பத்தாறு பேர். அதில் பன்னிரண்டு பேர் மட்டும் கமலக் கண்ணன் தலைமையில் கதை நிகழ்ந்த இடத்தைக் கண்டு வர புறப் பட்டார்கள். (பொ.செ.ஆர்வலங்கர் ஆரம்பித்த இணையக் குழுவின் www.ponniyin selvangroup@yahoo.com அரட்டையினூடே உதித்தது இந்தப் பயண யோசனை) கூடவே ஒட்டிக் கொண்டோம் நாமும்.

மயிலாடுதுறையில் தங்கி குடந்தையைச் சுற்றி பொ.செ. கதை நிகழ்ந்த இடத்துக்கு வழிகாட்டி அழைத்துச் சென்றார் பிரின்ஸ் டவர்ஸ் ஹோட்டலின் பொது மேலாளர் சீதாராமன்.

"**க**ளைத்திருக்கும் குதிரை மீது மெல்லச் சென்று கொண்டிருக்கிறான் வந்தியத் தேவன். அன்று பதினெட்டாம் பெருக்குத் திருவிழா. ஆண்களும், பெண்களும், குழந் தைகளும் புத்தாடை அணிந்து, விதவிதமான அலங்காரங்கள் செய்து கொண்டு வந்திருக் கிறார்கள். கூட்டாஞ் சோறும், சித்திரான் னமும் எடுத்துக் கொண்டு குடும்பம் குடும்ப மாக உட்கார்ந்து அருந்துகிறார்கள். உண வருந்த உதவுகிற கமுகு மட்டைகளை ஏரிக் குள் எறிந்த குழந்தைகள், அவை வெளியே விழுந்தடித்துக் கொண்டு ஓடி வருவதைப் பார்த்து கைகொட்டிச் சிரிக்கிறார்கள். வம்புக்கார ஆடவர்கள் தங்கள் காதலிகளின்



• ஆர்வக் குழு



• தஞ்சைக் கோயிலைச் சுற்றி...

கூந்தல் மலர்களை நீரில் எறிந்து அவை வெளியே ஓடி வருவதைக் கண்டு ரசிக்கிறார்கள்."

அதோ வடவாற்றில் ஓடங்கள் வருகின்றன. என்ன கொடி அது? ஆகா, பனை மரக் கொடி! பழுவேட்டரையர்கள்!

'ஏரிக்கரை மீது எப்படி வேன் கட்டி வரலாம்?' என்று கத்தியை உருவினாலும் உருவலாம்.



• கலங்கரை விளக்கம் அன்று!

• எத்தனை சிற்பங்கள்!

வீர நாராயண ஏரிக்கரையிலிருந்து விரைந்து புறப்பட்டது (வீராணம்) குழு.

கடம்பூர்:

நம் கதாநாயகனைக் கோட்டை வாசலில் தடுத்து நிறுத்தி விசாரிக்கிறார்கள்.

"என் ஊரும் பேருமா, கேட்கிறாய். வாணகப்பாடி திருவல்லம் என் ஊர். என்னுடைய குலத்து முன்னோர்களின் பெயர்களை உங்கள் நாட்டு வீரர்கள் தங்கள் மார்பில் எழுதிக் கொண்டு பெருமையடைந்தார்கள். என் பெயர் வல்லவரையன் வந்தியத்தேவன். தெரிந்ததா?" என்கிறான். தடுக்கிறார்கள்.

தொடர்ந்து கோட்டை வாசலில் சிறிய கலவரம். சண்டை, கூச்சல், குழப்பம்.

கந்தமாறன் வெளியே வந்து அழைத்துப் போகிறான்.

அந்த அரண்மனையில் கந்தமாறன் சுற்றிக் காட்டிய நிலா முற்றங்கள், ஆடல் பாடல் அரங்கங்கள், பண்டக சாலைகள், பளிங்கு மண்டபங்கள், மாட கோபுரங்கள், ஸ்தூபிகள், கலசங்கள், குதிரை லாயங்கள் — இவையொன்றுமில்லை. வைக்கோலை வழி யெங்கும் கொட்டி வைத்திருக்கும் வெறும் குக்கிராமம்தான் இருக்கிறது.

சுற்றிச் சுற்றி வந்த குழுவினருக்கு ஓர் இடிந்த சுவர் கூடக் கிடைக்காத ஏமாற்றம் முகத்தில்.

வேறு வழியில்லை — ஏக்கம் தீர எல்லோரும் கண்களை மூடிக் கொண்டு 'குரவைக் கூத்து' பார்க்க ஆரம்பித்தார்கள்.

பயணம் தொடர்ந்தது.

"ஆலிலைமேல் பள்ளி கொண்ட திருமாலின் அம்சத்துடன் இவன் வயிற்றில் ஒரு பிள்ளை பிறப்பான். அவனுக்குத் தடங்கல் என்பதே கிடையாது. அவன் நினைத்ததெல்லாம் கை கூடும். எடுத்ததெல்லாம் நிறைவேறும். அவன் தொட்டதெல்லாம் பொன்னாகும்..."

விஷ்வக்சேனன்

– என்று குடந்தை ஜோதிடர் வானதிக்குப் பிறக்கப் போகும் வீர குமாரனைப் பற்றிச் சொன்னாரே! அந்த குமாரன், வீர ராஜேந்திர சோழன் பிற்காலத்தில் கட்டிய இரண்டாவது தலைநகர். பொன்னியின் செல்வன், ராஜராஜனாக அரியணையேறிய பின் 25 ஆண்டுகள் கழித்துக் கட்டிய ஒப்பற்ற தஞ்சைக் கோயிலின் பிரதி. கங்கை கொண்ட சோழபுரம்!

இவற்றைக் கட்டிய, செதுக்கிய, சிற்பிகள் என்ன, சோழ நாட்டிலிருந்தவர்கள்



தானா, அல்லது தேவலோகத்தில் "மயன் ஆர்ட் அண்ட் ஆர்க்கிடெக்ட்ஸ்" பொறியியல் கடிகையில் பட்டம் பெற்ற விற்பன்னர்களா?

குந்தவைக்கும் வானதிக்கும் குடந்தை ஜோதிடர் மீது அபிமானம் ஏற்பட்டதோ இல்லையோ, யாத்திரைக் குழுவிலிருந்த லாவண்யாவுக்கு குடந்தை ஜோதிடரிடம் ஜோசியம் கேட்க வேண்டுமென்ற ஆர்வம் அதிகமாகவே இருந்தது. உடனிருந்தவர்களை 'குடந்தை ஜோதிடர் வீடு எது? பார்க்க வேண்டும்? யாருக்குத் தெரியும்?'– என்று நச்சரிக்க ஆரம்பித்து விட்டார்.

குடந்தை ஜோதிடரின் முகவரியோ, தொலைபேசி எண்ணோ எவருக்கும் தெரியவில்லையாதலால் அடுத்த வேலை பார்க்கப் புறப்பட்டது குழு. (யாராகிலும் குறைந்த பட்சம் அவரது ஈ-மெயில் முகவரியையாவது தெரிவித்தால் நலமாயிருக்கும்.)

பழுவூர்:

குன்றக் கூடத்து அவனி கந்தர்வபுரம். ராஜராஜனின் ஐந்தாவது மனைவி பஞ்சவன் மாதேவியின் ஊர். சோழ வம்ச சேவையிலேயே வாழ்நாளைக் கழித்த பழுவேட்டரையர் வம்சம் வாழ்ந்த ஊர். அந்த வம்சத்து இரணமுக ராமன் எடுப்பித்த திருத்தோற்றமுடையார் கோயில், சிதிலமாகிப்போய், பூஜைகளின்றி, கவனிப்பாரற்றுக் கிடக்கிறது. சுவர்களெங்கும் எத்தனையோ வரலாற்றுக் கதைகளைக் கூறும் கல்வெட்டுக்கள். பாதுகாக்கவும் பராமரிக்கவும் தான் எவருமில்லை.

ஓய்வுக்குப்பின் மறுதினம் காலை தஞ்சைப் பெரிய கோயிலையும் கோட்டையையும் காணச் சென்ற போது, கல்கி ஏஜெண்ட் ஜெயராமன் காத்திருந்தார். கோயிலைச் சுற்றிக் காட்டவும், முக்கியமான இடங்களைக் காணவும் அவர் செய்த ஏற்பாடுகள் பேருதவியாக இருந்தன.

பொன்னியின் செல்வன் கட்டிய இந்தக் கோயிலுக்கு ஈடான கட்டடம் இந்த உலகத்தில் எங்காவது இருக்கிறதா, என்று எந்த கட்டடக்கலை நிபுணராவது சொல்வார்களா? எத்தனை முறை சுற்றி வந்தாலும் அலுக்கவில்லை.

வல்லத்து வந்தியத்தேவனின் பரமார்த்த சீடர் (கிருபா சங்கர்) ஒருவரும் குழுவில் இருந்தார். அவர் நமது கதா நாயகன் கோடிக்கரைக்குப் போய் விட்டதாகத் தெரிவிக்கவே, யாத்திரைக் குழுவும் கோடிக்கரையை நோக்கிப் புறப்பட்டது.

கோடிக்கரையை அடையும்போது மாலை மணி ஐந்து. ஆயிரம் வருடங்களாக 'அப்படியே' இருக்கும் குழகரைப் பார்த்து விட்டு, குழு கலங்கரை விளக்கத்தைக் காணப் புறப்பட்டது.

'மாலை ஐந்து மணிக்கு மேல் காட்டுக்குள் போய் கலங்கரை விளக்கத்தைப் பார்க்க அனுமதி கிடையாது' என்றார்கள். வனத்துறை அதிகாரி அன்பழகன் 'கல்கி'க்காக பிரத்யேக அனுமதி வழங்கினார். கூடவே ஒரு வழி காட்டியையும் அனுப்பி வைத்தார்.

மணல்வெளியில் புதர்க் காடு. 'ரவிதாஸன் சிக்கிக் கொண்ட புதை மணல்' எங்கிருக்கிறதோ தெரியவில்லை.

பழைய கலங்கரை விளக்கம் கண்ணில் பட்டதும், வேனுக்குள் சிரிப்பும் பேச்சும் சட்டென்று ஓய்ந்து அமைதி நிலவியது. எல்லோரும் கண் கொட்டாமல் பார்த்தார்கள்.

**"அலைகடலும் ஓய்ந்திருக்க**
**அகக் கடல்தான் பொங்குவதேன்..."**

பூங்குழலி பாடுவது கேட்டது.

நன்றாக இருட்டும்வரை அங்கிருந்து வர மனமேயில்லாமலிருந்துவிட்டு, யாத்திரைக் குழு குடந்தையை நோக்கிப் புறப்பட்டது.

குடந்தைக்கு வடமேற்கே மண்ணியாற்றங் கரையிலிருக்கிறது திருப்புறம்பியம்.

"......அவர்கள் இரண்டு பேரைக் காட்டிலும் கொடிய விரோதி, முதன்மையான விரோதி, ஆழ்வார்க்கடியான் என்று பொய்ப் பெயர் பூண்ட திருமலையப்பன்தான். அவனை எங்கே கண்டாலும் கையிலுள்ள ஆயுதத்தை உடனே அவன் மார்பில் பாய்ச்சி விடுங்கள். இல்லாவிட்டால் மென்னியைத் திருகிக் கொல்லுங்கள், அல்லது விஷத்தைக் கொடுத்துக் கொல்லுங்கள்...'' ரவிதாஸன் சொல்லிக் கொண்டே போகிறான்.



''அதோ போறாரே அந்த ஆசாமி, 'ஐஸ் விற்று' பெரிய பணக்காரரானவர்!''

''இதென்ன பிரமாதம்...? எங்க பேட்டையில ஓர் ஆசாமி 'ஐஸ் வச்சே' பெரிய பணக்காரனா வளர்ந்துட்டாரே!''

– நாமக்கல் பாலு

– சதிகளும் போர்களும் நடந்த இடம். பள்ளிப்படை எங்கே இருந்ததென்று யாருக்கும் தெரியவில்லை. யுத்த பூமி. இன்னும் அந்தப் பகுதியில் அடிக்கடி சண்டை சச்சரவுகள் அதிகமாக நடக்கும் இடம் அது, என்று சொன்னார் சீதாராமன்.

யாத்திரைக் குழுவிலிருந்தவர்களுக்குள் சண்டை, வாக்குவாதம் என்று வருவதற்குள் கிளம்பிவிடலாமென்று புறப்பட்டு விட்டது குழு.

வந்தித்தேவனை பலவிதமான யுக்திகளையும், தந்திர மந்திரங்களையும், சண்டைகளையும், கையாளச் செய்து, கதை முழுவதும் வெற்றி தேடித் தந்த காதலென்னும் சக்தி உதயமான இடம் – பழையாறை –

அநிருத்தரின் பூட்டிய மாளிகைக்குள் புகுந்து, பின்புறத் தோட்டம் வழியே குந்தவையின் மாளிகைக்குப் பின், கொடி வீட்டின் மறைவில் நின்று கொண்டிருக்கும் ஆழ்வார்க்கடியானுடன் நாமும் சேர்ந்து மறைந்து நின்றால், அந்த சக்தி என்ன என்பது புரிந்துவிடும்.

காளிதாஸன் போன்ற மகாகவிகள் வர்ணிக்க வேண்டிய நிகழ்ச்சிகள் அங்கே நடந்து கொண்டிருக்கின்றன.

நீரோடைக் கரையில் படகு வந்து நின்றது... ஈசான பட்டரும், வந்தியத்தேவனும் இறங்கி வருகிறார்கள்.

குந்தவை எழுந்து நிற்கிறாள்.

வந்தியத் தேவன் அந்தப் பெண்ணரசியின் முகத்தை அப்போதுதான் கூர்ந்து பார்க்கிறான்.

பார்த்தது பார்த்தபடியே நின்றான்.

அவனுக்கும் இளைய பிராட்டி குந்தவைக்கும் மத்தியில் ஒரு பூங்கொடி தன் தளிர்க்கரத்தை நீட்டி இடை மறித்து நிற்கிறது.

அந்தக் கொடியில் ஓர் அழகிய பட்டுப்பூச்சி – பல வர்ண இறகுகள் படைத்த பட்டுப்பூச்சி – வந்து உட்கார்ந்தது.

குந்தவை தன் பொன் முகத்தை சிறிது குனிந்து அந்தப் பட்டுப் பூச்சியைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

வந்தியத்தேவனோ, குந்தவையின் முக மலரையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டு நிற்கிறான்.

ஓடையில் அலைகள் ஓய்ந்து அடங்கின.

பட்சி ஜாலங்கள் பாடுவதை நிறுத்தின. அண்ட பகிரண்டங்கள் அசையாது நின்றன.

பல யுகங்கள் சென்றன!'

– அவர்களுக்கு நடுவே குறுக்கிட யாத்திரைக் குழுவினரில் எவருக்கும் மனமில்லை. மெல்ல நகர்ந்து, வெளியேறி வந்து விட்டார்கள்.

பொன்னியின் செல்வனிலிருந்தும், சோழ நாட்டிலிருந்தும் மீளவே மனமில்லாமல், இன்னும் ஓரிரு இடங்களையும் பார்த்துவிட்டு, யாத்திரைக்குழு மீண்டும் சென்னையை நோக்கிப் புறப்பட்டது. ○

# ஆபத்துக் கட்டளைகள்!

## வட்டமேஜை

காதல் பிசாசே தொடர், ஒவ்வொருவருக்குள்ளும் உறைந்து கிடக்கும் காதல் உணர்வுகளை நுட்பமாக வெளிக் கொணர்கிறது. மேலும், யதார்த்த உவமைத் தூண்களில் மிகப் பெரிய அர்த்த மண்டபங்கள் அழகாகப் பொருந்தியிருப்பதைக் காண முடிகிறது.

நேதாஜி, பிரபுத்தன்

"ஜெ.யின் டென் கமாண்ட்மெண்ட்ஸ் பற்றிய கார்ட்டூன் கமெண்ட்ஸ்" தூள் அவரது பத்துக் கட்டளைகளும் ஆபத்துக் கட்டளைகள்தான்.

அயன்புரம்,
த. சத்தியநாராயணன்

பள்ளிக்கூடப் புத்தகத்தின் நடுவே ஒரு மயிலிறகை வைத்துவிட்டு, அது குட்டி போட்டு விட்டதா என்று அடிக்கடி புரட்டிப் பார்த்த அந்தக் கால நினைவுகளை, இந்த வாரக் கல்கி ஞாபகப்படுத்தியது, கவர் ஸ்டோரிக்கு நடுவில் வண்ண மயிலிறகைக் கண்டபிறகு!

சென்னை - 5, கே.கணேசன்

ஹிந்துத்வா' பற்றிய வாசகர்களின் பல கோண கருத்துக்கள் பளிச்சென்று இருந்தன.

திருவாரூர்,
எஸ். பாலச்சந்தர்

பணம் Vs பாரம்பரியம் என்ற ரவுண்ட் அப் பகுதி நல்ல 'தொகுதி' ஸ்கேனாகத் தெரிந்தது.

திசையன்விளை,
ஆர்.ஜி.அம்பி

போதைப் பழக்கம் எவ்வாறெல்லாம் மனக்குரங்கை அலை பாயச் செய்யுமென்பதை நகைச்சுவை மிளிர உணரச் செய்தது 'போதை மரம்' சிறுகதை.

போடிநாயக்கனூர், எஸ்.எம். பாலசுப்ரமணியன்

பணம் பண்ணும் தொழிலாகக் கலைத்துறையை அணுகாமல் தன்னையே பணயமாக வைத்துப் படத்திற்குப் படம் கதாபாத்திரமாகவே வாழும் கமல், ஆஸ்கர் வாங்கினால் அந்த விருதுக்குத்தான் பெருமை.

சென்னை - 61, ஆர். நாகராஜன்.

"தமிழில் ஒரு ஹாலிவுட் முயற்சியைச் சாதித்துக் காட்டுவேன்" என்னும் கணேஷ் ரகுவின் கனவு வெகு விரைவில் நினைவாகட்டும்.

தோட்டப்பாளையம்,
திருமலை நாயகன்.

உலகக்கோப்பை போட்டியில் சில பந்தயங்கள் கிரிக்கெட் சரித்திரத்தில் கல்வெட்டாய்ப் பதிந்து விட்டன. அப்படிப் பட்ட பந்தயங்களிலிருந்து சில பரபரப்பான காட்சிகளின் ஃப்ளாஷ்பேக்.

# மறக்க முடியுமா?

### 1999 ஆஸ்திரேலியா Vs தென்னாப்பிரிக்கா

ஆஸ்திரேலியாவும் தென்னாப்பிரிக்காவும் அரையிறுதிக் கட்டத்தில் மோதின. டாஸை வென்ற தென்னாப்பிரிக்க அணி கேப்டன் ஹான்ஸி க்ரோனியே, ஆஸ்திரேலிய அணியை முதலில் பேட் செய்ய அழைத்தார். ஐந்தாவது விக்கெட் ரொம்ப உறுதியாக அமைந்தது. பெவன் 65 ரன்களும் ஸ்டீவ் வாக் 56 ரன்களும் எடுத்தார்கள். என்றாலும் தென்னாப்பிரிக்க அணியின் பந்து வீச்சை ஓரளவுக்கு மேல் சமாளிக்க முடியவில்லை. பொல்லாக் ஐந்து விக்கெட்டுகளும் டொனால்ட் நான்கு விக்கெட்டுகளும் எடுக்க, 213 ரன்களோடு திருப்திப் பட்டுக் கொள்ள வேண்டிய நிலை ஆஸ்திரேலியாவுக்கு ஏற்பட்டது.

தென்னாப்பிரிக்கா நம்பிக்கையுடன் தான் ஆட்டத்தைத் துவக்கியது. ஆனால் 61 ரன்கள் எடுத்தபோதே நான்கு விக்கெட்டுகள் சரிந்து விட்டன. ஒரு வழியாக அந்த நிலையில் காலீஸ் மற்றும் ரோட்ஸ் இணைந்து 84 ரன்களை எடுத்தனர்.

இரண்டு ஓவர்கள் தான் பாக்கி என்கிற நிலையில், தென்னாப்பிரிக்கா வெல்ல வேண்டுமானால் 18 ரன்கள் எடுக்க வேண்டும். மூன்று விக்கெட்டுகள் கைவசம் இருந்தன. மெக்ராத் வீசிய இரண்டாவது பந்திலேயே பவுச்சர் அவுட். அதற்கு அடுத்த பந்திலேயே எல்வொர்த்தியும் ரன் அவுட். தென்னாப்பிரிக்காவின் நிலைமை சிக்கல். அப்போது க்ளூஸ்னர் ஒரு சிக்சர் அடித்தார். அடுத்து ஒரு சிங்கிள் அடித்து, தாமே கடைசி ஓவரின் தொடக்கத்தில் பந்தை எதிர்கொள்ளும் வகையில் நின்று கொண்டார். ஒரு ஓவரில் ஒன்பது ரன்கள் எடுக்க வேண்டிய நிலை. இப்போது ஃப்ளெமிங் வீசிய இரு பந்துகளை எல்லைக்கு அனுப்ப, இரு தரப்பின் ரன்களும் சமமாயின. இரண்டு பந்துகளும் ஒரு விக்கெட்டும் பாக்கி என்னும் நிலை. க்ளூஸ்னர் வேகமாகப் பந்தை அடித்து விட்டு ஓடத் தொடங்கினார். ஆனால் மறுமுனையிலிருந்த டொனால்ட் அங்கேயே ஆணி வைத்து அடித்தாற்போல் நின்றுவிட, இரு பேட்ஸ்மென்களும் ஒரே முனையில்! பெவன் வேகமாக ஸ்டம்ப்புகளை நோக்கிப் பந்தை வீச, அது திசை மாறியது. பார்வையாளர்கள் பரபரப்பின் உச்சத்தைத் தொட்டனர். உடனே வேகமாக அந்தப் பந்தை எடுத்த ஃப்ளெமிங், விக்கெட்


• 1975 உலகக் கோப்பையில் அற்புதக் கேட்ச்: ராட்னி மார்ஷ்





கீப்பர் ஆடம் கில் க்ரிஸ்ட்டிடம் வீச, அவர் ஸ்டம்புகளை வீழ்த்தினார்.

உலகக் கோப்பையைப் பொறுத்தவரை இதுவரை 'டை' யில் முடிந்த ஒரே போட்டி இதுதான்! (என்றாலும் ஆரம்ப நிலைப் போட்டிகளில் தென்னாப்பிரிக்காவை ஆஸ்திரேலியா வென்றிருந்தது என்பதால், இறுதிச் சுற்றுக்கு ஆஸ்திரேலி யாவே தேர்வு செய்யப்பட்டது.)

### 1975 ஆஸ்திரேலியா Vs மேற்கிந்திய அணி

மேற்கிந்திய அணியும் ஆஸ்திரேலிய அணியும் இறுதிச் சுற்றில் மோதின. ஆஸ்திரேலியாவுக்குத்தான் வெற்றி கிட்டும் - இதுதான் பலரது எதிர்பார்ப்பு. ஆனால் நடந்தது வேறு.

ஆஸ்திரேலிய வீரர் தாம்ஸன் பந்தை பேட் செய்ய, ஃப்ரெடரிக்ஸ் அதை காட்ச் பிடித்து விட்டார். அதுதான் கடைசி விக்கெட் என்பதால், மேற்கிந்திய அணியின் ரசிகர்கள் வெற்றி கோஷங்களை எழுப்பியபடி மைதானத்துக்குள் நுழைந்து விட்டனர். ஆனால் அது ஒரு நோ பால் என்பது பிறகுதான் தெரிந்தது. எனவே தாம்ஸன் அவுட் இல்லை என்றானது. அதே சமயம் நோ பாலாக இருந்தாலும் ரன் அவுட் முறையில் மட்டும் ஒருவரை அவுட்டாக்கலாம் என்பதால், தாம்ஸன் ஓடிக்கொண்டிருக்கும்போதே ஸ்டம்பு களை நோக்கிப் பந்தை வீசினார் ஃப்ரெடரிக்ஸ். ஆனால் உள்ளே புகுந்த ரசிகர்களுக்கிடையே அந்தப் பந்து எங்கோ சென்று விட்டது! இரு பேட்ஸ்மென்களும் இதுதான் சாக்கு என்று தொடர்ந்து ஓடி ரன்களைக் குவிக்க முற்பட்டனர். ஆனால் அம்பயர் விரைந்து செயல்பட்டார். அவர்களைத் தடுத்து நிறுத்தி ஆஸ்திரேலிய அணிக்கு இரு ரன்களை மட்டும் கொடுத்தார்.

அதற்குப் பிறகு சிறிது நேரம் போட்டி நடக்க, மேற்கிந்திய அணி பதினேழு ரன் வித்தியாசத்தில் வென்றது. என்றாலும் மேற்கூறிய பரபரப்பு, கிரிக்கெட் ரசிகர்களின் நினைவிலிருந்து நீங்காதது.

### 1975 இந்தியா Vs இங்கிலாந்து

சுனில் காவஸ்கரின் கிரிக்கெட் சரித்திரத்தில் இது ஒரு கரும்புள்ளி. இங்கிலாந்தோடு இந்தியா மோதிய போட்டியில், முதலில் பேட் செய்த இங்கிலாந்து 334 ரன்களைக் குவித்தது. இந்திய அணி தனது இன்னிங்ஸைத் தொடங்கியபோது துவக்க ஆட்டக்காரராக உள்ளே நுழைந்த காவஸ்கர், ரன்களையும் குவிக்காமல், அவுட்டும் ஆகாமல் அத்தனை இந்திய ரசிகர்களையும் வெறுப்பின் உச்சிக்குக் கொண்டு சென்றார். 174 பந்துகளை எதிர்கொண்ட அவர் எடுத்தது வெறும் முப்பத்திநாலு ரன்கள்தான். போதாக் குறைக்கு கடைசி வரை அவர் ஆட்டம் இழக்கவில்லை என்ற பெருமை வேறு! மூன்று விக்கெட் இழப்புக்கு 132 ரன்கள் என்ற கேவலமான கணக்கோடு இந்திய அணி தன் ஆட்டத்தை முடித்துக் கொள்ள வேண்டியதாயிற்று.

### 1983 இந்தியா Vs ஜிம்பாப்வே

இந்தியா 32 ரன்களில் வெற்றி பெற்றது. என்றாலும் இந்த வெற்றி மகத்தானது. முதலில் பேட் செய்த இந்தியா பதினைந்து ஓவர்கள் முடியும்போது, ஐந்து விக்கெட்டுகளை இழந்து, வெறும் 17 ரன்களே பெற்றிருந்தது. இப்படி ஓர் அவலமான நிலையில் பேட் செய்ய வந்தார் கபில்தேவ். 175 ரன்களைக் குவித்தார். இன்னிங்ஸ் இறுதியில்கூட அவர் அவுட்டாகவில்லை. 266 ரன்களை இந்தியா எடுக்க, அடுத்து வந்த ஜிம்பாப்வே அணியால் 235 ரன்கள் மட்டுமே எடுக்க முடிந்தது. இந்தப் போட்டியைப் பொறுத்த வரை, இந்தியர்களுக்குப் பெரிதும் வருத்தமளிக்கக் கூடிய விஷயமும் உண்டு. அன்றைய போட்டியை வீடியோவில் பிபிசி பதிவு செய்யவில்லை. எந்தத் தனியாரும் கூட இந்த முயற்சியில் அன்று ஈடுபடவில்லை என்பதால், கபிலின் சாதனை வீடியோவில் பதிவாகாமலேயே போய் விட்டது.

- அருண்

எந்த அழகான
பெண்ணையும்
நான் பார்க்காமல்
இருந்ததில்லை
எந்த அழகான
பெண்ணும்
எனைப் பார்ப்பதாகத்
தெரியவில்லை
கண்களிலிருந்தே
தொடங்குகிறது
காதலெனில், அது
இடது கண்ணா? வலது
கண்ணா?



அப்போது தொலைக்காட்சி இத்தனை சாதாரணமான பொருளாகக் கருதப்படவில்லை. தெருவுக்கு இரண்டொருவர் மட்டுமே பயன்படுத்தி வந்தார்கள். வெள்ளிக்கிழமையில் ஒளியும் ஒலியும் பார்ப்பதற்காகக் கூட்டம் கூட்டமாய்த் தொலைக்காட்சி இருக்கிற வீட்டில் குவிவது இயல்பாயிருந்தது. சில வீடுகளில் தலைக்கு ஒரு ரூபாய் என வசூல் செய்யப்பட்டது.

கடந்த முப்பதாண்டுகளில் தகவல் தொழில் நுட்பத்தின் வளர்ச்சி மேலோங்கியிருப்பதை மறுப்பதற்கில்லை. இன்று விரும்பாவிட்டாலும் தன் வீட்டில் இருக்க வேண்டிய பொருட்களில் ஒன்றாகிவிட்டது தொலைக்காட்சி. தனியார் தொலைக்காட்சியின் பெருக்கமும், சினிமாவின் ஆதிக்கமும் உயர உயர, மனிதனின் நிம்மதியும் அமைதியும் குறைந்துவிட்டது. ஒரு பண்டிகை நாளில் ஒளிபரப்பப்பட்ட பாடல்:

உன்னைக் கண்டு நானாட
என்னைக் கண்டு நீயாட
உல்லாசம் பொங்கும்
இன்ப தீபாவளி
ஊரெங்கும் மகிழ்ந்து
ஒன்றாகக் கலந்து
உறவாடும் நேரமடா

- அந்தத் தீபாவளி மிகுந்த சந்தோஷத்தைக் கொண்டு வந்தது. புத்தாடைகளை விடவும் ஒளிபரப்பாகிய இப்பாடல் மகிழ்ச்சியைத் தருவித்தது. இதை எழுதிய பட்டுக்கோட்டையாரை முதல் முதலாக இதே சிலிர்ப்போடு தரிசித்தவர் பலருண்டு. கடவுளர் படத்துக்கு பூ வைப்பது போல, தொலைக்காட்சியின் நெற்றிக்கும் பூவைத்த குமரவேல் அம்மாவை இப்போது நினைத்தாலும் சிரிப்பு உதிர்வதைத் தவிர்க்க முடியவில்லை. தீயைக் கண்டு பயந்த முதல் மனிதன் கையெடுத்து வணங்கியதைப் போல தொலைக்காட்சியையும் வணங்கிய காலம் அது.

ஆசைக்கு அணை போட்ட
அறிவான நங்கை
அன்புக்குப் பொருள் சொன்ன
அருள் மங்கை
பாசத்தின் சுமையோடு
பறந்து சென்றாளே
பழகும் உனையும்
மறந்து சென்றாளே

18

# காதல் பிசாசே!

**யுகபாரதி**

வேறொரு சந்தர்ப்பத்தில் ஒளிபரப்பான இந்தப் பாடலைக் கேட்டு குமரவேல் அண்ணன் யாருக்கும் தெரியாமல் கண் கசிந்ததை நானறிவேன். வேட்டி நுனியில் இமை துடைத்துக் கொண்டு முற்றத்துக்கு விரைந்து விட்டார். அடர்ந்த அவர் தாடிக்கும், வெகுநாள் திருமணம் வேண்டாமென்று அவர் வாதாடியதற்கும் காரணம் தெரிந்தது. எல்லோரின் வீட்டிலும் இன்றைக்குத் தொலைக்காட்சி வந்து விட்டது. யார் வீட்டிலும் குமரவேலைக் காண முடிவதில்லை.

பெண்கள் கோபத்தையும், ஆண்கள் கண்ணீரையும் அனுஷ்டிக்கக் கூடாதென்பார்கள். இரண்டையும் தொலைக்காட்சிகள் செய்தன. காதலுக்கான நுட்பத்தை உடைத்துத் தரை மட்டமாக்கின. மெல்லிய உணர்வுகள் சப்தங்களின் அதிர்வால் நொறுங்கிவிட்டன. ஆசைக்கு அணைபோட்ட அறிவான நங்கை மறந்துவிட; அன்புக்கு பொருள் சொன்ன ஒருத்தியோடு வாழத் தலைப்பட்ட குமரவேல் முதலில் வந்ததை மட்டுமே காதலென்று நம்புவது, அவர் குழந்தைக்கு வைத்திருக்கும் பெயரைக் கொண்டு அறியலாம்.

ஐந்து பேரைக் காதலித்தேன். ஒருவர் கூட என்னைக் காதலிக்கவில்லை என்பவருண்டு. ஐந்து முறையும் காதலிப்பதற்கான முயற்சியிலிருந்து ஒருவரைக் கூட காதலிக்கவில்லை என்பதே உண்மை.

***முகமும் முகமும் சந்திக்கும் போது***
***முதலில் வருவது தயக்கம்***
***மோகம் வளர்ந்து சிந்திக்கும்போது***
***மூளைக்குத் தருவது மயக்கம்***
***முழுவதும் தெரிந்து இதயம் கலந்து***
***முடிவில் வருவது இணக்கம் —***
***அதற்கிடையில் வருவது பிணக்கம்.***

சட்டென்று சொல்லிவிட்டால் எதிலும் சுவாரஸ்யமில்லை. சுற்றி வளைத்துச் சொல்லப் போய், எதுவுமே சொல்லாமல் விட்டால், அதிலும் பயனில்லை. கொஞ்சம் போல் காத்திருந்து; கொஞ்சம்போல் எதிர்பார்த்து, இதயம் கலத்தல் இனிது. பட்டுக்கோட்டையாரின் எளிமையைப் போன்றது காதல். எளிமையின் உயரத்தை எட்டித் தொடும் காதல் அவர் கருத்துக்களைப் போல் கெட்டியானவை. ஒரு பின்னணிப் பாடகியின் உதடுகளைப் போல் யாருக்கோ பாடியது தனக்கும் பொருந்தி வருவது, திரைப்பாடலின் வெற்றிச் சூத்திரம்.

***ஆசையினாலே மனம்***
***அஞ்சுது கெஞ்சுது தினம்***
***அன்பு மீறிப் போனதாலே***
***அபிநயம் புரியுது முகம்.***

ஆசைக்கு அணை போட்டவளை எழுதுகிற அதே விரல், ஆசையினால் மிதக்கும் மீன் மனதையும் எழுதுகிறது. அன்புக்குப் பொருள் சொன்னவளை இறுக்குகிற அதே எழுதுகோல் அபிநயம் புரிகிற முகத்தையும் வடிக்கிறது. பட்டுக் கோட்டையாரின் பாட்டுத் திறம், ஒரு கருத்தின் மீது அவர் கொண்டிருக்கும் பதிவு எந்த சூழலுக்காகவும் மாறிவிடாததே. திருடாதே என்று எழுதினாலும், திருடனுக்காக எழுதும் போதும், திருட்டை நியாயப்படுத்தாதது அவர் கொள்கை. நேர்மையும் நம்பிக்கையும் காதலின் கைப்பிடிகள். அறுந்துவிடாமல் சுமைகளைத் தூக்கிக் கொள்வது நம் பொறுப்பு.

***தடுத்தவர்கள் வென்றதில்லை***
***சரித்திரமே சொல்லும் — காதல்***
***அடுத்தவர்கள் அறியாமல்***
***ரகசியமாய்ச் செல்லும்***

பூனையைப் போல் ரகசியமாய் உள் நுழைந்து யானையைப்போல சாய்த்துவிடுகிற வல்லமை காதலுக்கு உண்டு. என்றும் அஞ்சாமை காதலின் அரிச்சுவடி. கேட்காமல் எடுத்துப் போவது புறத்தில் சுயமை. அகத்தில் உரிமை.

**அ**ழகான பெண்களைப் படைத்த ஆண்டவனுக்கு ஓர் ஆசை வந்தது. தான் உருவாக்கிய பெண்ணைப் போல இன்னொன்றை உருவாக்க முயன்றான். கொஞ்சம் கொஞ்சமாய்க் கோத்து, பின் வட்டமாய் செய்து முடித்தான். அது பௌர்ண

மியானது. அடடா, நினைத்தது போல வர வில்லை எனக் கிள்ளினான். அது, தேய் பிறையானது. இப்படியாகக் கிள்ளிக் கிள்ளி உருவாக்க முயன்று தோற்றபோது அது, அமாவாசையானது. தொடர்ந்து உருவாக்க வும்; முடியாமலும் போகப் போக, பெண் ணுக்கு நிகரான ஒன்றை அவனால் இயற்ற முடியாமலே போய்விட்டது.

***என்னருமை காதலிக்கு***
***வெண்ணிலாவே — நீ***
***இளையவளா? மூத்தவளா***
***வெண்ணிலாவே?***

***கன்னத்தில் காயமென்ன***
***வெண்ணிலாவே — உன்***
***காதலன்தான் கிள்ளியதோ***
***வெண்ணிலாவே***

கன்னங்களைக் கிள்ளிய விரல்களை காதலோடு முத்தமிட்டுச் செல்கிறது மனது. காயம் ரணமென்றாலும் அதை வரவழைக் கிற காதலின் குணம் சுகமானது. கெஞ்சி னால் தரமாட்டான் வெண்ணிலாவே, நீ கேட்காமல் பறித்துவிடு வெண்ணிலாவே, என்கிறார். அஞ்சிடாமல் தன்னை அபகரித் தவளைக் கேட்காமல் நீயும் பறித்துவா, என்பது பதிலுக்குப் பதில். பழிக்குப் பழி.

**வீ**ட்டுக்குள் நுழைந்த தொலைக்காட்சி யைப் போல, மனசுக்குள் நுழைந்த காதலும் நம்மை ஆதிக்கம் செலுத்துகிறது. தொலைக் காட்சியற்ற வீடும், காதலற்ற மனதும் கௌரவமற்றதாகிவிட்டன. எதிர்பாராத செய்திகளை இரண்டுமே கொண்டு வரும். எங்கேயோ ஒளிபரப்பப்படுகின்ற தகவல் களை அப்படியே விழிகள் உள்வாங்கிக் கொள்கின்றன. எங்கேயோ உணரப்படுகின்ற தவிப்புகள், அதே விகிதத்தில் காதல் மனத்தில் புகுந்து விடுகின்றன. தொலைக்காட்சியை விரும்பினால் நிறுத்திவிடலாம். காதலை விரும்பாவிட்டாலும் நிறுத்த முடியாது.

தொலைக்காட்சியும் தொலைபேசியும் தொழில் நுட்ப வளர்ச்சி பெற்றெடுத்த குழந்தைகள். சேட்டையும் வேட்டையும் இதன் விளையாட்டு. இந்த விளையாட்டு காதலிலும் உண்டு. 'இமைக்குள் நழுவியவள்' தொகுப்பில் கலை இலக்கியா எழுதுவதைப் போல

***உன் சிறு அசைவுகள்***
***என் உயிர் பலூனை***
***உப்பி அடைத்துக் கொண்டதோடு***
***நெளிந்து புரண்டு***
***கொட்டிச் சிணுங்கி அவை***
***கும்மாளமிடும் வேதனையை***
***மறைக்க மறைக்க***
***நீ***
***சீக்கிரம் புரிந்து கொள்.***

உயிர் பலூனை உப்பி அடைத்து விடு கிறது காதல். மெல்லத் தொடுகிற விரல்கள் அதன் மிருதுவை உணருமா? உடைக்குமா? கொட்டினால் அள்ளி விடலாம். கொத்தினால் வலி பொறுக்கலாம். சுற்றிச் சுற்றி இர வில் நுழைந்து சூறையாடும் கனவுகளை என்ன செய்வது? தலை யணை முடிச்சு கள் அவிழ்க்கப் பட்டால் அதி லிருந்து சிதறி ஓடும் காதல் விண் மீன்கள். அன்பே, சொல், நீ கண்மணியா? மின்மினியா?

(தொடரும்)





# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை - 63. போன்: 22760612.

City Office: No.7, முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை - 600 033. போன்: 23714942.

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர்! வணக்கம்

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 14 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய், தந்தையற்ற, திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 180 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை, மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன் உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே, தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (180 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித் தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில் / வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியை பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு Cheque / DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்

சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர்    A. ராஜாபக்கிரிசாமி MSc., MEd.,

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு



# இப்படியும் சொல்வாங்க!

உலகக் கோப்பையை இந்தியா வெல்லுமா? – இந்தியாவிலுள்ள சுமார் நூறு கோடி பேர் மனத்தில் எழுந்திருக்கும் இந்தக் கேள்வியை, பொதுவாக எல்லா பிரச்னைகளிலும் தலையிட்டுப் பதில் அளிக்கும் திறமை வாய்ந்த அத்தனை பேரிடமும் கேட்டோம்! (அவர்கள் பதில் சொன்னதாக நாங்கள் கற்பனை பண்ணிக் கொண்டோம்)

**குஜராத் முதல்வர் நரேந்திர மோடி:**

இந்தியா நிச்சயம் உலகக் கோப்பையை வெல்லும். ஆனால் அதற்குச் சில வழிமுறைகளைக் கடைப்பிடித்துதான் ஆக வேண்டும். டாஸ் போடும் போது கங்குலியுடன் மற்ற பத்துப் பேரும் 'பேட்'டுடன் நிற்க வேண்டும். அதே போல் எதிர் அணி ஆட்டக்காரர்களும் கிரவுண்டில் நிற்க வேண்டும் – 'பேட்' இல்லாமல். டாஸ் விழுந்ததோ இல்லையோ, ஓடிப்போய் ஆறு ஸ்டம்புகளையும் பிடுங்கிக் கொண்டு எதிரணி ஆட்டக்காரர்களைக் கண்மண் தெரியாமல் தாக்கிக் கீழே சாய்க்க வேண்டும். 'பேட்'டால் மண்டையில் ஓங்கி ஓர் அடி. ஆளுக்கு ஒன்று போதும். பிறகு பிடுங்கிக் கொண்டு வந்த ஸ்டம்ப்பால் ஒரு குத்து. அம்பயர்கள் இரண்டு பேரும் இதைப் பார்த்துப் பயந்து ஓடுவார்கள். ஓடுகிறார்களே என்று விட்டுவிடக் கூடாது. துரத்திப் பிடித்து, அதே ஸ்டம்ப்பால் ஆளுக்கு ஒரு குத்துக் குத்தினால் போதும். எழுந்திருக்க மாட்டார்கள். தேர்ட் அம்பயர், ஐசிசி பிரசிடென்ட் என்று யார் வந்தாலும் இதே உத்தியைக் கையாண்டால் போதும். இந்தியாவை வெல்ல எந்த அணியாலும் முடியாது. 'கப்'பைத் தூக்கிக் கொண்டு வந்து விடலாம்.

**பிரதமர் வாஜ்பாய்:**

எல்லை தாண்டிய பயங்கரவாதம் இருக்கிற வரை இந்தியா உலகக் கோப்பையை வெல்ல முடியாது. பாகிஸ்தான் ஆட்டக்காரர்கள்தான் ஆஸ்திரேலியா, இங்கிலாந்து, நியூசிலாந்து என்று எல்லா அணிகளிலும் வேறு வேறு சட்டை அணிந்து கொண்டு ஆடுகிறார்கள். அம்பயர்கள் எல்லாம் ஜெய்ஷே மொகம்மது, லஷ்கர் ஏ தொய்பா ஆட்கள். இதை நான் ஏற்கெனவே ஐ.நா. சபையில் இந்தியிலும், ஜார்ஜ் புஷ், டோனி ப்ளேர் ஆகியோரிடம் இங்கிலீஷ் கலந்த இந்தியிலும் சொல்லிச் சொல்லி என் தொண்டைத் தண்ணீர் வற்றிப் போய் விட்டது. இந்தியாவுக்கு எதிராக ஆடும் அணியின் பாட்ஸ்மென் ஐந்து பேரையும், பிறகு போலர்கள் மூன்று பேரையும் கிரவுண்டுக்கு வெளியே அனுப்பிவிட்டால், இந்தியா நிச்சயம் உலகக் கோப்பையை வெல்ல வாய்ப்பு இருக்கிறது. வெளியுறவுத் துறை அமைச்சர் யஷ்வந்த் சின்ஹாவிடமும், அத்



நினைக்கிறேன். நமது அணியில் குறைந்தது பத்து பாட்ஸ்மென்னாவது சதம் அடித்தால் இந்தியா நிச்சயம் உலகக் கோப்பையை வெல்ல முடியும். ஐம்பது ஓவர்களில் இது சாத்தியமா என்று கேட்கலாம். இது வெறும் பிதற்றல். கையில் பேட் இருந்தால் அடிக்க முடியாதா? அப்புறம் அவர் என்ன பாட்ஸ் மன்? அதுபோல, ஸ்ரீநாத்தும் ஜஹீர்கானும் பந்தை வீசிய உடனேயே அம்பயர் அவுட் கொடுத்துவிட வேண்டும். விக்கெட் வீழ்ந்தாலும் சரி, விழாவிட்டாலும் சரி. இந்தக் குறைந்தபட்ச விதிகளைக் கடைப்பிடித்தால் போதும். இந்தியாவுக்கு உலகக் கோப்பை உறுதி.

**ஜெ. ஜெயலலிதா:**

'கட்டாய வெற்றி தடைச் சட்டம்' கொண்டு வருவது ஒன்றுதான் இந்தியாவுக்கு உலகக் கோப்பையைப் பெற்றுத் தரும். இந்தியாவுக்கு எதிராக எந்த அணி ஆட்டக் களத்தில் இறங்கினாலும், 'பொடா' சட்டத்தின் கீழ் அவர்களை உடனுக்குடன் கைது செய்து சைபீரியா, நிகராகுவா, போன்ற கண்ணுக்கெட்டாத நாடுகளில் உள்ள சிறைகளில் அடைத்து விட்டால் கங்குலி உலகக் கோப்பையுடன் வெற்றிகரமாக இந்தியாவுக்கு வருவார்!

இதற்கிடையில் காஞ்சி சங்கராச்சாரியார் விஜயேந்திரருடன் தனி விமானத்தில் தென் ஆப்ரிக்கா புறப்பட்டுச் சென்று, முன்னாள் அதிபர் நெல்சன் மண்டேலாவுடன் பேச்சு வார்த்தை நடத்தி, அயோத்தி பிரச்னையில் சுமுகமாகத் தீர்வு கண்ட மாதிரி, உலகக் கோப்பையையும் இந்தியாவுக்கே பெற்றுத்தர, நாளை புறப்படுகிறார். அவர் முயற்சி தோல்வி அடைந்தால், ஆயிரக் கணக்கான ஆர்.எஸ்.எஸ். தொண்டர்களும், பஜ்ரங்தள் ஊழியர்களும், அசோக் சிங்கல், ப்ரவீன் தொகாடியா, ராம்சந்திர பரமஹன்ஸ் ஆகியோர் தென் ஆப்ரிக்கா போவார்கள் என்று செய்தியாளர்களிடம் தெரிவித்தார்.



வாணியிடமும் இதை ஏற்கெனவே தெரிவித்துவிட்டேன்.

**நடிகர் பத்மஸ்ரீ கமல்ஹாசன்:**

உலகக் கோப்பை என்பது அப்படி ஒன்றும் பெரிய ஆஸ்கர் அல்ல. நம் நினைப்பில் எது நடக்க முடியாதது போல் தோன்றுகிறதோ அதை நாம் உலகக் கோப்பை வடிவில் காண்கிறோம். கிரிக்கெட் சரித்திரத்தின் பரிணாம வளர்ச்சியின் பரிமாணத்தை வைத்துத்தான் இதற்குப் பதில் சொல்லியாக வேண்டும். பரிணாமம் பரிமாணம் ஆகும்போதுதான் சாத்தியம் என்பது சத்தியம் ஆகும். இந்திய வீரர்கள் ஆடும்போது ஸ்டம்புகள் மூன்றுக்கும் இடையே நிறைய இடைவெளி விட்டு, பெயில்லைத் தட்டாமல் பந்து எளிதாகப் புகுந்து செல்லுமாறு நட வேண்டும். இது ஒரு பரிமாணம். இன்னொன்று பரிணாமம்: ஒரு சமயத்தில் இரண்டு பாட்ஸ்மென்தானே களத்தில் இருக்கிறார்கள்? அதுபோல ஒரு போலர், ஒரு விக்கெட் கீப்பர் மட்டுமே எதிரணியில் இருக்க வேண்டும் என்று சொல்ல வேண்டும். இதை ரஜினிகாந்தால் கூடச் சொல்ல முடியாது!

**'துக்ளக்' ஆசிரியர் சோ:**

நீங்கள் சொல்லுவது எதிர்காலத்தில் அப்படியே பலித்துவிடுகிறதே என்று கேட்கிறார்கள். உலகக்கோப்பையை இந்தியா வெல்லுமா என்ற இந்தக் கேள்வியும் அந்த வகையில் கேட்கப்பட்டதுதான் என்று

சாருகேசி



# வருங்காலத்தில் வாய்ப்பு யாருக்கு?

*(கல்வியாளர் ஆனந்த கிருஷ்ணனுடன் மாணவர்கள் சந்திப்பு-சென்ற இதழ் தொடர்ச்சி)*

**பொறியியல் படிப்பை மேற்கொள்ளும் மாணவர்களின் எதிர்காலம் எப்படியிருக்கும் என்று நினைக்கிறீர்கள்?**

அவர்கள் பெரும் ஏமாற்றத்துக்கும் தயாராக இருக்க வேண்டியதுதான். ஒவ்வொரு வருடமும் அதிக எண்ணிக்கையில் பொறியியல் பட்டதாரிகள் உருவானால் அத்தனை பேருக்கும் வேலை வாய்ப்பு இருக்குமா? அந்த அளவுக்குத் தமிழகத்தில் தொழில் வளர்ச்சி இருக்குமா? பெரிய நிறுவனங்களில் வேலைக்காக நபர்களைத் தேர்ந்தெடுக்கும்போது, பல்கலைக்கழக மதிப்பெண்களுக்கு அதிக மதிப்புக் கொடுப்பதில்லை. சில பிரபல தனியார் நிறுவனங்களில் மேலாளர்களுடன் நான் பேசிப் பார்த்தேன். "நம் பல்கலைக் கழகங்களின் மதிப்பீடுகளை மதிக்கிறோம். ஆனால் ஒரு சில காலி இடங்களுக்காக ஆயிரக்கணக்கில் விண்ணப்பங்கள் குவியும்போது, மதிப்பெண்களைத் தவிரவும் வேறுபல குணாதிசயங்கள் யாருக்கு உள்ளன என்பதைப் பார்க்கிறோம். எங்கள் நிறுவனத்தால் இவர்கள் வளர்வது ஒருபுறமிருக்க, இவர்களால் நிறுவனம் வளருமா எனும் கோணத்தில் யோசிப்போம்" என்றார்கள்.

**அப்படியென்ன குணநலன்களை இந்த நிறுவனங்கள் எதிர்பார்க்கின்றன?**

முக்கியமாக கம்யூனிகேஷன் திறமை. அதாவது சொல்ல நினைப்பதைத் தெளிவாகவும், திறமையாகவும் வெளிப்படுத்தும் வல்லமை. வாடிக்கையாளர்களிடம் இவர் நன்கு தன்னம்பிக்கையுடன் பேசுவாரா? பிரச்னைகள் வந்தால் இவரால் அதைத் தீர்க்க முடியுமா? என்பதையெல்லாம் முக்கியமாகப் பார்க்கிறார்கள். படிப்பு மட்டுமல்லாது விளையாட்டு, விவாதங்கள், இசை போன்றவற்றிலும் ஈடுபாடு இருந்தால் வாய்ப்பு அதிகம்.

**வருங்காலத்தில் எதற்கான வேலை வாய்ப்பு இந்தியாவில் அதிகமாக இருக்கும் என்கிறீர்கள்?**

மாறிவரும் காலத்தின் தேவைகளுக்கேற்ற பொருள்களை உற்பத்தி செய்பவர்களுக்கு என்றுமே சிறந்த வேலை வாய்ப்பு உண்டு. முன்பெல்லாம் கடைத் தெருவில் கோணிப் பைகளில் அரிசியை வைத்துக் கொண்டிருப்பார்கள். கடைகளில் வைத்து விற்கப்படும் மாவில், தெருவில் உள்ள தூசி காற்றில் வந்து கலக்கும். இப்போதெல்லாம் பிளாஸ்டிக் பைகளில் குறிப்பிட்ட எடைகளில் விற்பது மிகப் பெரிய வியாபாரமாகிவிட்டது. சுத்தமான, நியாயமான எடை கொண்ட அரிசியைச் சற்று அதிக விலை கொடுத்து வாங்கப் பலரும் தயாராக இருக்கிறார்கள். உணவுப் பொருள்களை பேக்கேஜ் செய்யும் தொழில் போன்றவற்றுக்கு நல்ல வருங்காலம் உண்டு. அதேபோல் சேவைத் தொழில்களுக்கு



வளமான வருங்காலம் இருக்கிறது. கூரியர் சேவை எவ்வளவு பெரிய அளவில் செழித்து வருகிறது என்பதைக் கண்ணெதிரே பார்க்கிறோமே. மும்பையில் டிபன் கேரியர்களை பல வீடுகளுக்கும், அலுவலகங்களுக்கும் எடுத்துச் செல்வதே நிறையக் காசு புரளும் ஒரு தொழிலாகிவிட்டது.

மென்பொருள் தயாரிப்பு நிறுவனங்களில் தயாரிப்பதோடு நின்றுவிட முடியாது; அவற்றிற்கான ஆணைகள் மற்றும் மேனுவல்களை நல்ல மொழியில் துல்லியமாக எழுதத் தெரிந்தவர்கள் தேவைப்படுவார்கள். ஆக, மொழி ஆளுமையும், தகவல் தொடர்புத் திறமையும் கொண்டவர்களுக்கு வருங்காலத்தில் பிரகாசமான வாய்ப்புக்கள் உண்டு.

**வருங்கால வேலை வாய்ப்புகளில் கல்லூரிப் படிப்புக்கு முக்கியத்துவம் இருக்காது என்கிறீர்களா?**

கல்லூரிப் படிப்போடு கூடவே கண்களைத் திறந்து சுற்றும் முற்றும் பாருங்கள் என்கிறேன். சேலத்தில் தக்காளி கிலோவுக்கு எண்பது பைசா என்று விற்பதாகச் செய்தி. இரண்டு கிலோ வாங்கினால், ஒரு கிலோ இலவசம் என்று கொடுக்கிறார்களாம். நாற்பதாயிரம் ரூபாய் செலவு செய்து கிடைத்த விளைச்சலைக் கொண்டு, நாலாயிரம் ரூபாய்கூட சம்பாதிக்க முடியவில்லை என்று விவசாயிகள் வேதனைப்படும் செய்தியைப் படிக்கும் இளைஞர்கள், வருத்தப்படுவதோடு நின்றுவிடக்கூடாது. தக்காளியை நீண்ட காலம் கெட்டுப் போகாமல் வைத்திருக்க ஏதாவது புதிய முறை இருக்கிறதா என்பதை ஆராய வேண்டும். தக்காளி சாஸ், தக்காளி சட்னி போன்றவற்றை மலிவான விலையில் தயாரித்து விற்க இது ஒரு நல்ல வாய்ப்பு இல்லையா?

**ஏற்கெனவே பொறியியல் கல்லூரிகளில் ஆயிரக்கணக்கில் மாணவர்கள் படித்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கெல்லாம் கவலைக்கிடமான எதிர்காலம்தானா? தவிர, பல பெற்றோர்களும் இன்னமும்கூட தங்கள் வாரிசுகளைப் பொறியியல் கல்வியில் இறக்குவதைத்தானே முக்கியமாக நினைக்கிறார்கள்?**

இந்த மாணவர்கள் இடிந்துபோக வேண்டிய அவசியமில்லை. ஒழுங்காகப் படிக்கும் நேரம் போக பாக்கி நேரத்தை சினிமா, தொலைக்காட்சி என்று முழுவதுமாகச் செலவிட வேண்டாம். எங்கே வாய்ப்புகள் கிடைக்கின்றன என்பதைப் பற்றி விழிப்புணர்வோடு இருங்கள். பொறியியல் படிக்கும்போது பலவித தகவல்களைச் சேகரியுங்கள். சர்வதேசக் கட்டுரைகளைப் படியுங்கள். நான்கைந்து பேராக இணைந்து கொண்டும் இதுபோன்ற முயற்சியில் ஈடுபடலாம். நான்கு வருடம் என்பதை அழகாகத் திட்டமிட்டு வாய்ப்புகளைத் தேர்ந்தெடுக்கலாம்.

லயோலா கல்லூரியில் 'லிவ்' என்று ஒரு அமைப்பு இருக்கிறது. கல்லூரியில் படிக்கும்போதே வேறுபல துறைகளைப் பற்றி இதில் சேர்ந்து தெரிந்து கொள்ளலாம். சுற்றுலா, டிராவல் ஏஜென்ஸி போன்ற வேலை வாய்ப்பு அதிகம் உள்ள பிரிவுகளில் இவர்கள் பயிற்சி கொடுக்கிறார்கள். இதுபோன்ற அமைப்புகள் அதிகமாக வேண்டும்.

- ஜி.எஸ்.எஸ்.

படங்கள் : ஸ்ரீஹரி

# அடையாளங்கள்

"நீ... கடவுளின் குழந்தை. உன்னுடைய வடிவமே கடவுள்தான். உனக்குப் பிறப்பும் இல்லை, இறப்பும் இல்லை, எப்போதும் நீ இதை நினைவில் வைத்திரு. மற்ற எல்லா எண்ணங்களையும் விலக்கிவிடு!"

**- சுவாமி சச்சிதானந்தா, ஆனந்தாசிரமம்**

இருபது நாட்களாகி விட்டன. அவன், பேச்சையே மறந்து போய் விட்டானா? யார் கேட்டாலும், எதைச் சொன்னாலும் அவனிடமிருந்து ஒரு சொல்லும் வெளிப்படவில்லை. கடல் மடை திறந்த மாதிரிப் பேசிப் பேசியே வாழ்ந்தவன், அன்றைக்குத் தலைவர் வந்து பரிவோடு அவன் கரம் பற்றியபோதுகூட வாய் திறக்கவில்லை. இத்தனைக்கும் கிட்டத்தட்ட அரை நூற்றாண்டுக் காலமாய் அவனுடைய மதிப்புக்கும் மரியாதைக்கும் உரிய தலைவர் அவர். அவரை மட்டுமே நிமிர்ந்து பார்த்தான். நான்கு கண்களும் பேசிக் கொண்டன. அவ்வளவே! மற்ற யார் யாரோ வந்தும் பேசியும், அழைத்தும்கூட அவன் மௌனமாகத் தலை நிமிராமலேதான் இருந்தான்.

எதிரே, மேஜை மீதிருந்த நாள்காட்டித் தகடு மாற்றப்படாமல் இருபது நாட்களுக்கு முந்தைய தேதியையும், கிழமையையும் காட்டிக் கொண்டிருந்தது. மேஜை மீதான கண்ணாடித் தகட்டில் வைக்கப்பட்ட காபி தம்ளரின் தடம் மட்டும் சரிவரத் துடைக்கப்படாமல் மணம் வீசிக் கொண்டிருந்தது.

அவனுடைய வெறித்த பார்வை, கீழே தரை விரிப்பின்மீது மையம் கொண்டிருந்தது.



**சுப்ர. பாலன்**



**மினி தொடர் 1**

வந்து நின்றவர்கள் தொண்டையைச் செருமிக் குரல் எழுப்பினார்கள். அதிசயம் போல் சற்றே தலை நிமிர்ந்தான். அரை விநாடியில் பார்வையை வேறு புறம் திருப்பிக் கொண்டான்.

"தலைவர் கூட்டியாரச் சொன்னாருங்க. ஒரு அரை மணி நேரம் வந்தாக் கூடப் போதும்னாரு. அதான்..!"

கையை அசைத்து அவர்களை அமரச் சொன்னான். இருபது நாள் இடைவெளியில் இப்போதுதான் முதன் முதலாய்ப் பேசாத பேச்சு! அருகே தொலைபேசியை எடுக்க முயன்ற மகனைக் கையமர்த்திவிட்டுத் தானே அதை எடுத்தான். எதிர்முனைக் குரலை மட்டும் கேட்டுவிட்டு, அப்படியே வந்திருந்தவர்களில் ஒருவன் கையில் அதைக் கொடுத்தான்.

"நான் தானுங்க தலைவரே! இப்போத் தான் நிமிர்ந்து பார்த்தாங்க... சொன்னோம். இன்னும் பதில் வரல்லைங்க தலைவரே..."

எதிர் முனைக்குரல் ஏதாவது கட்டளை யிட்டு ஒய்ந்திருக்க வேண்டும். தொலை பேசிக் குரல் மீண்டும் பீடமேறியது.

''தலைவரு இட்ட என்னங்கய்யா சொல்லட்டும்?'' இன்னொருவன் கேட்டான். வந்திருந்த காபிக் கோப்பையை எடுத்துக் கொள்ளும்படி மறுபடியும் சைகை தான். எடுத்துப் பருகினார்கள். அவனுடைய மறுமொழிக்காக ஆவலோடு பார்த்தார்கள்.



அதே பழைய கம்பீரத்தோடு எழுந்தான். வாட்டசாட்டமான உயரம். கைகளை மட்டும் சேர்த்துக் கூப்பினான். வந்தவர்களுக்குப் புரிந்தது. அவர்களும் வணங்கிவிட்டு மௌனமாக வெளியே வந்தார்கள். அவனுடைய பார்வை மறுபடியும் நாள் காட்டித் தகட்டில் பதிந்தது.

"**நா**ன் ஒண்ணு சொல்லுவேன். கேட்பீங்களா?" அவனுடைய காதுகளில் கோதையின் குரல் எதிரொலித்தது.

அன்றைக்குக் காலையில்தான், நண்பர்கள் பெரிய அளவில் லாமினேட் செய்து கொண்டு வந்து வைத்திருந்த கோதையின் படத்தில் புன்னகை மாறாத உயிர்க்களை மிக நன்றாய்ப் பதிவாகியிருந்தது. அதற்குப் போட வேண்டும் என்று நண்பர்கள் கொண்டுவந்த மாலையைக் கூடப் போட வேண்டாம் என்று சைகையால் மறுத்திருந் தான். உதிர்ந்தும் உதிராமலும் இருந்த ரோஜா மாலையின் இதழ்களில் பட்டு மிதந்த காற்றின் மௌனமான நறுமணம், அவன் காதுகளில் மட்டும் எதையோ சொல்லிக் கொண்டிருந்தது. அப்படி அவன் உணர்ந்தான்.

'இனிமேல் இந்தப் படம்தான்; இது ஒன்று தான் துணை..! எஞ்சியுள்ள வாழ்நாளை, இந்தப் படத்தைப் பார்த்துத்தான் கரைத்தாக வேண்டும்' என்பது மிகவும் அழுத்தமாய்ப் புரிந்தது.

படத்திலிருந்த கோதையின் இதழ்கள் பிரிந்து சொற்கள் பூவாய் உதிர்ந்தன. 'இந்த இடத்தில், இந்தப் பிறவியில் நாம் பிரிகிறோம். அடுத்த பயணம் எங்கே, எப்படி? எப்போது? நீ நானாகவா? நான் நீயாகவா? எல்லாம் பிரமைதான் என்று புரிந்தும், அந்தப் பிரமையில் மீண்டும் மீண்டும் நனையவே அவன் விரும்பினான்.

கோதையின் பூஜை மாடத்தில் சிறிய வெண்கல விளக்கு அமைதியாகச் சுடர் விட்டு எரிந்து கொண்டிருந்ததை, அவனால் தன்னுடைய அறையிலிருந்தே பார்க்க முடிந்தது. என்னவோ ஓர் உந்துதலில் எழுந்து போனான். மாடம் அவனுக்கு மிகவும் புதிய இடம். அதனருகில் அவன் போனதே இல்லை. ஆனால் அந்த மாடத்தின் முன்னால், நின்றும் அமர்ந்தும் வழிபாட்டில் லயித்திருக்கும் கோதையை அவனுடைய

அவசரங்களிலும் பார்த்ததுண்டு. பலமுறை அந்தக் காட்சியை அவன் விரும்பியும் விரும்பாமலும் கூட, மனம் பதிவு செய்து வைத்திருப்பதால் நினைவில் மீட்டுக் கொண்டு வந்து பார்க்க முடிகிறது.

மாடத்தின் விளக்கருகே ஊதா நிற அட்டை போட்ட ஒரு மிகப் பழைய புத்தகம். அது புத்தகமா, குறிப்பேடா என்பது அவனுக்குத் தெரியாது. வழிபாட்டில் இருக்கும்போது கோதையின் கரங்களில் அந்தப் புத்தகத்தைப் பார்த்தது மட்டும் நினைவிருக்கிறது.

இன்று அந்தப் புத்தகத்தை, ஒரு சிறு பலகையின்மீது வைத்து, அதன்மீது ஒரு பூச்சரமும் சார்த்தியிருக்கிறது. அதை எடுக்க வேண்டும்போல் மனமும் கையும் பரபரத்தாலும், அவனுள் ஊறிப் போன சில நம்பிக்கைகள் தடுத்தன.

மகள் செந்தமிழ், உதவிக்கு வந்தாள்.

"என்னப்பா? அம்மாவோட பொஸ்தகம் வேணுமா? எடுத்துத் தாரேனே." என்றவாறே, பூச்சரத்தை மிருதுவாக எடுத்துப் பலகையில் வைத்துவிட்டு, அந்த ஊதா நிறப் புத்தகத்தைக் கொண்டு வந்து அவன் கரங்களில் தந்தாள் அவள்.

அவளை நிமிர்ந்து பார்த்துவிட்டுக் கண்களின் ஓரத்தைத் துடைத்துக் கொண்டான். புத்தகத்தைப் புரட்டினான். அதில் என்னென்னவோ பாடல்கள், சுலோகங்கள். எல்லாம் கோதையின் மணி மணியான கையெழுத்தில். முதல் பக்கத்தில் அவன் எதிர்பார்த்த வரிகள் கண்களில் பட்டன. சற்று முன்னால் காதுகளில் ஒலித்ததாக அவன் நினைத்த சொற்கள்!

யாரோ, எந்தக் கதையிலோ எழுதிய இந்த வரிகளைப் பற்றிப் பலமுறை அவனிடம் அவள் சொல்லியிருக்கிறாள். அசிரத்தையாக இருக்க முடியாத நிர்ப்பந்த நேரங்களில், அவன் இதுபோல் சிலவற்றைக் கேட்டாக வேண்டியிருக்கிறது. "அது என்னங்க? நான் நீயாகவா? நீ நானாகவா?" என்று கேட்டு அவனைச் சீண்டியிருக்கிறாள். அதன் பொருள் தெரிந்தேதான் சீண்டுகிறாள் என்பது அவனுக்குத் தெரியும். பதிலுக்கு அவனும் சீண்டுவான்.

"எவனோ வேலையற்றவனின் உளறல். பிதற்றல், போதுமா?"

அவள் முகம் பூவாய் வாடிப் போகும். அதற்கு மேல் அவள் மௌனமாகிவிடுவாள். மற்ற விஷயங்களில் எப்படியிருந்தாலும் அவன் நிஜமான ஆண் மகன்; நேர்மையான கணவன், நல்ல மனிதன், அதுபோதும் அவளுக்கு!

இன்றைக்கு அந்த வார்த்தைகளில் ஏதோ ஒரு மென்மையான பொருள் உறங்குவதாய் அவன் உணர்ந்தான். புத்தகத்தை அந்தப் பலகையின் மீது வைத்தான். செந்தமிழ் அதை ஒழுங்காக வைத்துப் பூச்சரத்தைப் பழையபடியே சார்த்தினாள்.

இன்னும் அவன் பேசவில்லை. இன்றாவது அவன் பேசக் கூடும் என்று மற்றவர்களைப் போலவே எதிர்பார்த்த செந்தமிழுக்கு ஏமாற்றமாக இருந்தது. ஆனாலும் விரைவில் பேசி விடுவான் என்கிற நம்பிக்கையை இன்று காலை முதலான அவனுடைய நடவடிக்கைகள் வெளிப்படுத்தியிருக்கின்றன.

கைத்தாங்கலாக அவனை அழைத்துப் போய் சோபாவில் அமர வைத்தாள். லாமினேஷன் படத்திலிருந்த கோதை குறும்பாகச் சிரிப்பதுபோல் இருந்தது அவனுக்கு. ஒரு விதமான வெட்கம் தன்னைச் சூழ்ந்து கொண்ட மாதிரி அவன் உணர்ந்தான்.

மறுபடியும் தொலைபேசி ஒலித்தது. இம்முறை அவன் அதைத் தீண்டவில்லை. செந்தமிழ்தான் அதை எடுத்தாள். எதிர்முனைக் குரலைக் கவனித்து விட்டு அவனிடம் சொன்னாள். "தலைவரோட மனைவி கூப்பிடறாங்கப்பா... ஒங்க கூடத்தான் பேசணுமாம்."

இரண்டு கைகளையும் கூப்பித் தன் விருப்பமின்மையைத் தெரிவித்தான். அழைத்தவர் தலைவரின் மனைவி மட்டுமில்லை!

(தொடரும்)

"நார்ச்சத்து உடம்புக்கு நல்லதுன்னு டாக்டர் சொன்னது தப்பாப் போச்சு!"

"என்னாச்சு?"

"கீரைக் கட்டு சுத்திக் கொடுத்த வாழை நாரைக்கூட கூட்டுல சேர்த்துடறா என் மனைவி!"

- சீர்காழி வி.ரேவதி





# சூப்பர் சிக்ஸ் போட்டி!




உலகக் கோப்பை ஸ்பெஷல் போட்டுட்டு போட்டி வைக்காம இருந்தா எப்படி? இந்தக் கேள்விகளுக்குச் சரியான விடையை எழுதுங்கள். எழுதியாச்சா? கேள்விகளுக்குப் பிறகு, கிரிக்கெட் பற்றி ஐந்து வரி (ஆறு வரிகூட வச்சுக்கலாம்) கவிதை அல்லது 'நச்' வாசகம் ஒன்றை எழுதி அனுப்புங்கள். கிண்டல், தத்துவம் என்று எப்படியாகவும் இருக்கலாம். கீழேயுள்ள கூப்பனில் உங்கள் முகவரியை எழுதி இந்தப் பக்கத்தை வெட்டி, மார்ச் பன்னிரண்டாம் தேதிக்குள் எங்களுக்கு அனுப்புங்கள். உறையின் மேல் 'கிரிக்கெட் போட்டி' என்று குறிப்பிட மறவாதீர்கள். ஐந்து விடைகளும் சரியாக எழுதிய நபர்கள் சூப்பர் சிக்ஸுக்குச் செல்வார்கள்! அவர்களுள் மிகச் சிறந்த கிரிக்கெட் கவிதை அல்லது வாசகம் எழுதும் மூவருக்குப் பரிசுகள். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

## கேள்விகள்

1) டான் பிராட்மன்................................ விளையாட்டிலும் சிறந்து விளங்கியவர்

2) முதன்முதலில் ................................ நகரத்தில்தான் செயற்கை ஒளி வெள்ளத்தில் ஒருநாள் கிரிக்கெட் போட்டி நடந்தது.

3) சர்வதேச கிரிக்கெட் போட்டிகளில் செஞ்சுரி அடித்த முதல் இந்திய வீரர் ................................

4) ஒரு டெஸ்ட் தொடரின் ஐந்து மேட்ச்களிலும் டாஸ் வென்ற இந்திய அணி கேப்டன் ................................

5) கால்பந்து உலகக் கோப்பை, கிரிக்கெட் உலகக் கோப்பை, இரண்டிலும் இது வரை இடம் பெற்ற ஒரே வீரர் ................................

6) கவிதை / வாசகம் :

---

---

---

---

---

---

## பரிசுகள்!




**வழங்கும்**

**முதல் பரிசு 21 inch. கலர் டீ.வி.**

மற்றும்

இரண்டாம் பரிசு ரூ.3,000/-

மூன்றாம் பரிசு ரூ.2,000/-

பெயர் : ................................

முகவரி : ................................

................................

................................

................................

# நடக்கும் என்பார்; நடக்கும்!



**மேஷம் :** 'நாலு தெரு சுத்துன தேரு, கடைசியிலே நிலைக்கு வந்துதானே ஆகணும்?' என்னதான் கஷ்டம்னாலும், அதுக்கும் விடியல்னு ஒண்ணு இருக்குல்ல? சிறுசிறு பிரச்னைகள் ஏற்பட்டு நிவர்த்தியாகும். எதிர்ப்புகள் விலகும். சுப காரிய முயற்சிகள் அனுகூலமாகும். பூர்வீக, பிதுரார்ஜித சொத்து, மனை, வீடு, ரியல் எஸ்டேட் வகையில் அனுகூலமான திருப்பம் உண்டாகும். குல தெய்வ பிரார்த்தனை நிறைவேறும். மக்கள் நல மேன்மை ஏற்பட்டு, மனத்தில் குதூகலம் நிரம்பி வழியும். மாணவர்கள் கடுமையாக உழைத்தால்தான் நல்ல பயன்பெறுவார்கள்.



**ரிஷபம் :** 'ஓட்டைச் சட்டியோ, ஒழுகல் பானையோ, கொழுக்கட்டை வெந்தால் சரி' என தேமே என்றிருந்தீர்கள் அல்லவா! இனி அந்தளவுக்கு அடங்கியிருக்கத் தேவையில்லை. தெளிவான மனநிலை, வசீகரம், சரளமான பணவசதி போன்றவை உண்டாகும். சுய தொழில், வியாபாரம் செய்து வருபவர்கள் முன்னேற்றம் காண்பார்கள். சிக்கலான காரியங்களைக் கூட சாமர்த்தியமாக நிறைவேற்றி வெற்றி பெறுவீர்கள். உடல் நலம் விஷயத்தில் கவனம் தேவை.



**மிதுனம் :** முட்டையிடற கோழிக்கில்ல வலி தெரியும்னு சொல்றது உங்க விஷயத்துலே கரெக்டா பொருந்தும். கை நிறைய சம்பளம் வந்தாலும், ஆபீஸ்லே இருக்கிற குடைச்சல் தாங்காம நீங்க பட்டதெல்லாம் சும்மாவா! இனி உத்தியோகத்தில் சிக்கல் இருக்காது. உத்தியோகத்தில் மேன்மை, பதவி உயர்வு, ஊதிய உயர்வு, விரும்பிய இடத்துக்கு இடமாற்றம் முதலியன உண்டாகும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு சுபிட்சமான நேரம். பெண்களுக்கு ஆரோக்கிய மேன்மை உண்டாகும். மக்கள் நலம் பாதிக்கப் படலாம். கவனம் தேவை.



**கடகம் :** 'எலி வளையானாலும் தனி வளை வேணும்னு' உங்க மனைவி நச்சரிச்சுக்கிட்டிருந்தாங்க இல்லையா. இப்ப சுப காரிய முயற்சிகள் நல்ல பயன்பெறும் அதிர்ஷ்ட நேரம் அமைந்திருப்பதால், முயற்சி செய்துதான் பாருங்களேன். காண்ட்ராக்ட், இண்டஸ்ட்ரீஸ், போக்குவரத்து, வாகனம், மருத்துவம், ரசாயனம் சம்பந்தப்பட்ட இனங்கள் ஆதாயம் கொண்டு வரும். உடன் பிறந்தவர்களால் மிதமான பலன்களே ஏற்படும். உத்தியோக சம்பந்தமாக வெளிநாடு போகும் பயணம் வெற்றி தரும்.



**சிம்மம் :** யார் யார் மீதோ அருள்பார்வையை வீசி அனுகிரகித்து வரும் குரு பகவான், இந்த வாரம சிம்ம ராசிக்காரர்களின் மீது கருணை காட்டியுள்ளார். எனவேதான் எதிர்பாராத தனலாபம், வெற்றிகரமான பலன்கள், காரியசித்தி என சகலமும், சடுதியில் வந்து சேரும். அரசியல்வாதிகள் பெயர், புகழ், அடைவார்கள். கடுமையான கடன் தொல்லையில் இருப்பவர்களும் படிப்படியாக முன்னேறி, மன அமைதி பெறுவார்கள். பெண்களுக்கு அதிர்ஷ்டமான வாரம்.



**கன்னி :** 'வெறுங்கை முழம் போடாது' என்பதை சர்வ நிச்சயமாக உணர்ந்த கன்னி ராசிக்காரர் நீங்கள். வாய்ச்சவடால் வேலைக்கு உதவாது என்பதை உணர்ந்து முனைப்புடன் காரியத்தில் இறங்குங்கள். சகல காரியங்களிலும் வெற்றி பெறுவீர்கள். உத்தியோகத்தில் உற்சாகமான நிலை ஏற்படும். இரும்பு, இயந்திரம், எஃகு, விஞ்ஞானம், ஆடை அணிகலன் முதலியன ஆதாயம் தருபவை.

பிப்ரவரி 26 முதல் மார்ச் 4 வரை



ஓவியர் அரஸின் மனைவி பாவைக்குப் (துலாம்) புதிய பொருள் சேர்க்கை உண்டாம்.



**துலாம் :** 'நடக்க மாட்டாதவன் சித்தப்பன் வீட்டிலே பெண் கேட்டானாம்' என்று கேலி செய்வார்கள் கிராமப் புறத்தில். நீங்கள் அதே கதையாக சோம்பித் திரிந்தால் முன்னேற்றம் வருமா? ஏற்ற பலன் கிடைக்கும் நேரம் வந்தாச்சு. தெய்வபலமும் கூடி நிற்பதால், புதிய பொருள் சேர்க்கை, வாணிபத்தில் வெற்றி, மன அமைதி, சரளமான பணவசதி என தானாகவே வந்து சேரும்.



**விருச்சிகம் :** தங்கத்தின் விலை வீழ்ச்சியடைந்துள்ள இந்த நேரத்தில், உங்களுக்கு குரு பார்வையும் நிறைந்து உள்ளதால், இதுதான் தக்க சமயமென்று, பொன், வெள்ளி ஆபரணங்களை வாங்கிக் கொள்ளுங்க. திருமணம், புதுமனை புகுவிழா போன்ற சுப காரியங்கள் நடக்கும் பாக்கியம் உள்ளது. நண்பர்கள், நெருங்கிய உறவினர்கள் உதவ முன் வருவார்கள். பெண்களுக்கு எல்லா விதத்திலும் அனுகூலமான திருப்பம் ஏற்படும்.



**தனுசு :** "எங்கே போனாலும் ஒண்ணு இடிக்குது. இல்லே கடிக்குது" என்று புலம்பிக் கொண்டே இருந்தால் எப்படி? மூக்குன்னு ஒண்ணு இருந்தா ஜலதோஷம்னு ஒண்ணு வரத் தானே செய்யும்? ஆபீஸ்னு ஒண்ணு இருந்தால், எதிர்ப்புகள் வராம இருக்குமா? சனிக்கிழமை தோறும் ஆஞ்சநேயரைப் பிரார்த்தனை செய்து கிரக வழிபாடும் செஞ்சுகிட்டு வாங்க. வெகு விரைவில், மறைமுக பிரச்னைகள் யாவும் தீர்ந்து, மறுபடி ஹாய்யாக உட்காரும் நிலைமை வரும். ரியல் எஸ்டேட் சுமாரான பலன்களே தரும். மாணவர்களுக்கு திருப்தியான வாரம்.



**மகரம் :** உங்கள் ராசிநாதன் சனி பகவான், பூர்வ புண்ணிய ஸ்தானத்தில் கூடி சஞ்சாரம் செய்வதோடு, 7ல் உச்சம் பெற்ற குரு, 11ல் கேது - உங்கள் ராசியில் சுக்ரன் என அட்டகாசமான சிட்டிங் பொஸிஷன் என்பதால் பொருளாதார நிலை ஓஹோ தான். 'என்னாகுமோ... எப்ப வருமோ?' என்று இழுத்தடித்துக் கொண்டிருந்த வெளிநாட்டுக் காரியங்கள் நல்லபடி நிறைவேறும். சுய தொழில் வியாபாரத்தில் முன்னேற்றம் உண்டாகும். பொருளாதார நிலையில் அபிவிருத்தி ஏற்படுவதால், வீட்டிலும் சந்தோஷ அலை பாயும். கலைத் துறையைச் சேர்ந்தவர்களுக்கு புகழ், பாராட்டு கிடைக்கும்.



**கும்பம் :** கொடுக்கும் தெய்வம் கூரையைப் பிய்த்துக் கொண்டு தரும் என்று சொல்றது சும்மா இல்லீங்க. நண்பர்கள், உறவினர்கள், உதவுவார்கள். சிலருக்கு வீடு, மனை வாங்கும் பாக்கியம் ஏற்படும். பெண்கள் நினைத்த காரியம் நடக்கும். 'சுய தொழில் செய்ய ஆசை... இப்ப சரியான நேரம்தானா?' என்று குழம்பிக் கிடக்காமல், சட்டுபுட்டென்று செயலில் இறங்குங்கள். தொழிலில் மேன்மையும், சீரான வளர்ச்சியும் உண்டாகும்.



**மீனம் :** மீனராசியில் பிறந்த பெண்ணா நீங்கள்? இந்த எட்டு நாளும் இனிமையாக அமையப் போவதற்கான அறிகுறிகள் தெரிகின்றன. ஜமாயுங்கள்! குடும்பத்தில் எல்லா வகையிலும் திருப்தியும் மகிழ்ச்சியும் நிறைந்திருக்கும். திருமணம் போன்ற சுப காரியங்கள் நடக்கும். திருமணம் ஆகாதவர்களுக்கு அதற்கான வாய்ப்பு கூடி வரும். உடன் பிறந்தவர்கள் அனுகூலமாக இருந்து, காரியங்களை எளிதாக்குவார்கள். தாய்வழி உறவில் இருந்த மனக் கசப்பு மாறி, பிரிந்தவர்கள் சேருவார்கள். ஆரோக்கிய மேன்மை கிடைக்கும். மக்களால் மகிழ்ச்சியும் வாழ்க்கைத் துணையால் இனிமையும் கூட வரும்.

# குறையொன்றுமில்லை

30

## முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

அசுவமேத மஹா மந்திரத்திலே பன்னிரண்டு மாதங்களையும் சொல்லி, 'இதனால் ஒரு சமவத்ஸரம் பூர்த்தியாகிறது' என்று சொல்லப்பட்டிருக்கிறது.

'சம்வத்ஸரோவை தாதா'

- தாதா என்று பகவானுக்குப் பெயர். சம்வத்ஸர ரூபியாய் இருக்கிறான். மாத ரூபியாக இருக்கிறான்; அயன ரூபியாக அவன் இருக்கிறான்; காலமாக இருக்கக் கூடியவன் அவன்தான் என்று அர்த்தம்.

கீதையிலே சொல்லியிருக்கிறான் பாருங்கள்: 'மாதங்களிலே நான் மார்கழியாக இருக்கிறேன்; ருதுக்களிலே நான் வஸந்த ருதுவாய் இருக்கிறேன்' என்று சொல்லியிருக்கிறான்.

அப்படியானால் மற்ற ருதுக்களில் அவன் இல்லை என்று அர்த்தம் இல்லை. அதெல்லாம் உபலக்ஷணம் என்று பெயர். 'மற்ற எல்லா ருதுக்களிலும் இருக்கிறேன்' என்பதைத்தான் முதல் ருதுவான உயர்ந்த ருதுவைச் சொல்லிக் காட்டுகிறான் பரமாத்மா.

கீதா பாஷ்யம் எழுதிய ஆசார்யர்கள் எல்லோருமே இப்படித்தான் சொல்கிறார்கள். கீதார்த்த சங்க்ரஹம் எழுதிய ஆளவந்தார், உயர்ந்த கீதா தாத்பர்ய சந்திரிகை எழுதிய சுவாமி தேசிகன் - அழகாக எழுதியிருக்கின்றனர். இந்த ஆறு ருதுக்களில் அந்தந்த காலத்திலே அருள்பாலிக்கிறான் எம் பெருமான்.

'ஆறும் ஆறும் ஆறுமாய்' என்பதில், இன்னொரு ஆறு பாருங்கள் - அது என்னவென்றால், மிக உயர்ந்ததாக இருக்கும்படியான சரணாகதியின் ஏற்றம். அதிலும் பகவான் இருக்கிறான்.

ஆறு விஷயங்கள் சரணாகதியிலே ரொம்ப முக்கியம்.

'பஞ்சாங்க சம்யுக்தம்' என்ற ஐந்து அங்கங்களோடு கூடிய சரணாகதியின் ஆறாவது அங்கம் 'ஆத்ம சமர்ப்பணம்' இந்த ஐந்து அங்கங்கள் தவிர வேறு ஒன்றையும் சரணாகதி எதிர்பார்க்காது...

முதலாவது அனுகூல்யஸ்ய சங்கல்பம். பகவானிடத்திலே நமக்கு அனுகூல புத்தி இருக்க வேண்டும். எம் பெருமானுடைய பெருமையைப் பேச வேண்டும்.

'ஜெய விஜயீ பவ' என்று காஞ்சிபுரத்திலே இரைந்து சொல்வார்கள், பெருமாளைப் பார்த்து. அப்படிச் சொல்வது ரொம்ப தூரத்துக்குக் கேட்கும். தீர்க்க ஸ்வரத்திலே ரொம்ப உற்சாகமாய்ச் சொல்ல வேண்டும்.

ஸ்ரீரங்கத்திலே போய்ப் பார்த்தோமானால், 'திருவா... லவட்டம்!'' என்று ஒருத்தர் கூவுவார். உடனே இன்னொருத்தர் விசிறி எடுத்துக் கொண்டு வந்து விசுறுவார்' பட்டர் ''புருஷ சூக்தம்'' என்று கூறிய உடனே, புருஷ சூக்தம் சொல்ல ஆரம்பிப்பார்கள். இந்த மாதிரி உபசாரத்தைச் சொல்லிச் சொல்லிப் பண்ணுவதை ஸ்ரீ ரங்கத்திலே பார்க்கலாம். இப்படி ஒவ்வொரு திவ்ய தேசத்திலும் ஒவ்வொரு விதமான அழகு.

எம் பெருமான் அர்ச்சா ரூபத்திலே (விக்ரஹ உருவத்திலே) காணும்படியான அழகுகள் ஒவ்வொன்றும் அலாதிதான். அவன் ராமனாகவும், கிருஷ்ணனாகவும், நரசிம்ஹனாகவும் அவதரித்த காலத்திலே எவ்வளவு வைபவம் நடந்திருக்கும் அவனுக்கு! அந்த எம் பெருமானுக்கு வைபவத்தைக் குறைக்கவே கூடாது. அவன் நல்ல முறையிலே விளங்க வேண்டும் என்று பிரார்த்திக்க வேண்டும். அந்த உத்ஸவாதிகளையெல்லாம் நடத்தி வைக்க வேண்டும். அதற்குரியவையெல்லாம் நல்ல முறையிலே ஏற்படுத்தி வைக்க வேண்டும்.

இரண்டாவது: பிராதி கூலயங்ய வர்ஜனம். பகவத் விஷயத்திலே நாம் ஈடுபடாத அளவுக்குத் தடை செய்கிறார்கள் பாருங்கள்... அவர்களையெல்லாம் - எப்படிப்பட்டவர்களாக இருந்தாலும் விட்டுவிட

வேண்டும்.

எம் பெருமானிடத்திலே பூரண விச்வாஸம் இருக்க வேண்டும். 'ரக்ஷிஷ்யதீதி விச்வாஸ:, அயமேவ ரக்ஷக! - அவன்தான் ரக்ஷகன். அவன் கட்டாயம் நம்மை ரக்ஷிப்பான் என்று பூரண விச்வாஸம் இருக்க வேண்டும் சரணாகதியிலே. மீதி விச்வாஸமெல்லாம் கிரமமாக வரலாம். ஆனால் சரணாகதியிலே மட்டும் 'விச்வாஸ பிரார்த்தனா பூர்வம்' என்று அது முன்னமேயே வந்து விடவேண்டும். 'என்னை ரக்ஷிக்க வேண்டியது உன் பொறுப்பு' என்று அவனிடம் சரணடைவதற்கு முன்பே வைக்கிற விச்வாஸம் இருக்கிறதே... மஹாவிச்வாஸம் என்று பெயர் அதற்கு.

**ஹி**ரண்ய கசிபு, கையிலே கத்தியை வைத்துக் கொண்டு, பிரஹலாதன் கையைப் பிடித்துக் கொண்டிருக்கிறான். 'நாராயணன் இதற்குள்ளே தெரிகிறானா சொல்லு!' என்று கத்தியைக் காண்பித்துக் கேட்கிறான். "அப்படியானால் ஒன்று பண்ணுகிறேன்... இந்தக் கத்தியினாலேயே உன் தலையை வெட்டித் தள்ளுகிறேன்; அப்போது அவன் கீழே இறங்கி வந்து, தலையையும் உடம்பையும் வைத்து, தைத்து, உனக்குப் பிராணனை உண்டு பண்ணுவானா?" என்று கேட்கிறான்!

இவ்வளவு கூச்சல் போடுகிறான் ஹிரண்ய கசிபு. இவனானால்... பிரஹலாதன் - சாந்த மூர்த்தியாய் இருக்கிறான்! அவ்வளவு பவ்யம்! "அப்பா..., நீ சொல்கிற மாதிரி அந்தக் காரியம் அவன் பண்ண மாட்டான்... அந்தக் காரியத்தை அவன் ஏன் பண்ண வேண்டும்?" என்று கேட்டான்.

பார்த்தான் ஹிரண்ய கசிபு. குழந்தையைக் கிட்டே இழுத்து அணைத்துக் கொண்டு விட்டான். "ஏன்டா! அவன்தான் உன்னை ரக்ஷிக்க மாட்டேன் என்று சொல்கிறானல்லவா... அப்படியானால் நீ அவனை ஏன் நம்புகிறாய்? நான் உன்னை ரக்ஷிப்பேன்... நான் உனக்கு ஜனக பிதா (பெற்ற தந்தை); என்னை நம்பு... ஏன் அவனைப் பிரார்த்திக்கிறாய்....?

"அப்பா! நான் சொல்வது உனக்குப் புரியவில்லையே..." என்றான் பிரஹலாதன்,

"நீ என்ன சொல்கிறாய்... கத்தியாலே என் கழுத்தை வெட்டுகிறேன் என்கிறாய். அப்படிச் சொல்கிறபோது அந்தக் கத்தியை கழுத்தண்டை கொண்டு வர அவன் விடுவானா! நீ கொண்டு வந்தால் அதன் பிறகு தானே வெட்ட முடியும்! கத்தியை என்

கழுத்தண்டை கொண்டு வாயேன், பார்ப் போம்!" என்றான்.

ஜனக பிதா எதிரிலே நிற்கிறான்... சர்வ லோக பிதா கம்பத்துக்குள்ளே இருக்கிறான். அந்தக் குழந்தைக்கு எவ்வளவு விச்வாஸம் பாருங்கள்... "கழுத்து அருகே கத்தி வர முடியுமா?" என்று கேட்கிறான்.

நாராயண பட்டத்ரி அந்த குருவாயூரப்பனைப் பார்த்து, "ப்ரஹலாதப்ரியா, ஹே குருவாயூரப்பா!" என்றார்.

"அப்படி என்னைக் கூப்பிடாதீர்" என்றான் அந்த குருவாயூரப்பன். "எல்லோரும் நீ எழுதிய புத்தகத்தைப் படித்துவிட்டு, நான் ப்ரஹலாதனுக்கு மட்டுமே ப்ரியன் என்று நினைத்துக் கொண்டு போய்விடுவார்கள். ஆனால் நிஜத்திலே அப்படி இல்லை. 'ப்ரஹலாத சமபக்தானாம் ப்ரிய..' என்று சொல்" என்றானாம் குருவாயூரப்பன்.

ப்ரஹலாதனுக்குச் சமானமான பக்தி இருக்கிறவர்கள் யாராயிருந்தாலென்ன... அந்த பக்தி இருக்கிற அத்தனை பேருக்கும் ப்ரியனாக இருக்கிறான் பகவான். அப்படிப்பட்ட பக்திதான் நமக்கு வேண்டும்.

இப்படி, கலியுகத்திலே, நானூறு வருஷத்துக்கு முன்பு குருவாயூரப்பனிடம் பேசியிருக்கிறார் நாராயண பட்டத்ரி. ராமாயண சுந்தர காண்டத்தைச் சொல்கிறார்: 'இலங்கைக்குப் போனான் ஹனுமான். மொத்தத்தையும் சூறையாடினான். 'கெட்டது கொடிநகர்' என்று ஊரையே துவம்ஸம் பண்ணினான்' என்று சொல்லிக் கொண்டே வருகிறார். 'அங்கேயிருந்து கொண்டு வந்த சூடாமணியை உன்னிடத்திலே கொடுத்தான் ஆஞ்சனேயன்' என்று சொல்லப் போகிறார், குருவாயூரப்பனைப் பார்த்து... அப்படிச் சொல்லப் போகிற போது அவருக்குச் சந்தேகம் வந்துவிடுகிறது. சுலோகத்தை நிறுத்திவிடுகிறார்.

எதிரே இருப்பவனோ குருவாயூரப்பன், கிருஷ்ணன். ஆஞ்சனேயன் சூடாமணியைக் கொடுத்ததோ, ராமனிடத்தில். நாளைக்கு இதைப் படிக்கிறவர்களெல்லாம் இது அபத்தம் என்று அல்லவா சொல்லுவார்கள்! 'குந்தியினுடைய பிள்ளை விநாயகர்' என்று சொல்கிற மாதிரி ஆகிவிடுமே! என்ன பண்ணலாம் என்று யோசனை பண்ணுகிறபோது, பகவான் குருவாயூரப்பனே அவரிடம் பேசுகிறான்:

"என்ன, உமக்குச் சந்தேகமா...? என்னிடம் சூடாமணியைக் கொடுக்கவில்லை என்று நினைக்கிறீரா...? இதோ பாரும்!" என்று சூடாமணியையே காண்பித்து விட்டான் குருவாயூரப்பன்! அதைப் பார்த்தவுடனே நாராயண பட்டரும் முதலில் பாடியபடியே 'உன்னிடம் கொடுத்தான்' என்று அமைத்து விட்டார் சுலோகத்தை.

இதைக் கேட்டதும் பரம சந்தோஷம் பரமாத்மாவுக்கு.

ஆகையினாலே, பாருங்கள்... பக்தர்களுடைய ஹ்ருதயத்தை அப்படி ஆகர்ஷிக்கிறான் பரமாத்மா. சந்தேகம் வருகிறபொழுது அவனே தெளிவித்துத் தன்னைக் காட்டித் தருகிறான்.

அப்படி எம் பெருமானிடத்திலே நேரே பேசினார் நாராயண பட்டத்ரி. 'ப்ரஹலாத ப்ரியா' என்று அவர் சொன்னபோது திருத்தினார்.

அதனால்தான், பரமாத்மா சொன்னான் கீதையிலே...

'பரித்ராணாய சாதூனாம் விநாசாயச துஷ்க்ருதாம்.' இதிலே ச சப்தம் ஏன் வந்தது...? இந்த 'ச'காரம் படுத்துகிற பாடு சொல்லி முடியாது. 'ச' அவ்யயம் என்று பெயர். சந்தஸ்ஸை நிறைப்பதற்காக வரும் அது.

சஹஸ்ரநாமத்திலே 'பூதாத்மா பரமாத்மாச முக்தானாம் பரமாகதி;' என்று பரமாத்மாசவில் வருகிற ச இப்படி சந்தஸை நிரப்புவதற்காக ஏற்பட்டதுதான். 'அதாவது இலக்கண அமைதிக்காகப் போட்ட ச. 'ச'வை எடுத்தால் ஓர் எழுத்து குறையும் சந்தஸ்ஸில் என்பதால் 'ச'வைப் போட்டிருக்கிறார் பீஷ்மாச்சார்யார்.

ஆனால் கீதையிலே பரமாத்மா போட்ட 'ச' அப்படி ஓசை நிரப்புவதற்காகப் போடவில்லை... அர்த்தத்தோடுதான் போட்டிருக்கிறான் பரமாத்மா.

(வளரும்)



"கூட்டத்துலே கன்னாபின்னான்னு பேசக் கூடாது. எண்ணிப் பார்த்துதான் பேசணும்..."

"எண்ணிப் பார்த்துட்டேன் தலைவரே! எட்டுப் பேர்தான் வந்துருக்காங்க..."

- தஞ்சை தாமு



அந்த மூன்றரை மணி நேரமும் இளமைத் துள்ளல்தான்! புற்றுநோயால் மரணமடைந்த இசையமைப்பாளர் மகேஷ் பெயரிலான அறக்கட்டளைக்காக நடந்த ரஹ்மானின் இந்த இசை மழையில் நனைந்தவர்கள், சுமார் நாற்பதாயிரம் பேர்.

'வணக்கம் மெட்ராஸ்!' என்று ஏ.ஆர். ரஹ்மான் வாய் திறந்தபோது, அரங்கம் அதிர்ந்தது என்று எழுத முடியவில்லை. காரணம், நிகழ்ச்சி நடைபெற்றது தரமணி இந்தியா பிஸ்டன்ஸ் கிரிக்கெட் மைதானம். எனவே, வானம் அதிர்ந்தது என்றால் மிகையில்லை!

"சென்ஸர் அரக்கனை வெல்ல இது ஒரு சின்ன முயற்சி என்ற முன்னுரையுடன் ஆரம்பித்த நிகழ்ச்சித் தொகுப்பாளர் சுஹாசினியை முதலில் அடையாளம் கண்டு கொள்வதற்குள் போதும் போதுமென்றாகிவிட்டது.

எஸ்.பி.பி., ஹரிஹரன், ஜானகி போன்ற சீனியர்களில் தொடங்கி, மகாலட்சுமி, கார்த்திக் போன்ற ஜுனியர்கள் வரை, ஒரு மெகா பட்டாளமே பாடல்களைப் பாடியது. எல்லாமே ரஹ்மான் இசையில் உருவானவை. சின்னச் சின்ன ஆசையில் தொடங்கி லேட்டஸ்ட் பாம்பே டிரீம்ஸ், காதல் வைரஸ் வரை பாடல்கள் இடம் பெற்றன.

• 'எம்.ஜி.ஆருக்குப்பின், இத்தனை பேரை ஒரே இடத்தில் வரவழைத்த பெருமைக்குரியவர் ரஹ்மான்' என்று கூறிய வாலி, சென்ஸர் மற்றும் ரஹ்மான் பற்றி ஒரு ஒண்ணரை நிமிடக் கவிதை வாசித்தார். கோலிவுட், பாலிவுட், ஹாலிவுட் என்று விரிந்து, ரசிக உள்ளங்





களைக் கொள்ளை கொண்ட ராபின்ஹூட்' என்றார் ரஹ்மானை. நெளிந்தார் ரஹ்மான்.

• வசுந்தரா தாஸ், ஷக்கலக்க பேபியைப் பாடியபடியே, இலே சாக டான்ஸ் போட, ரசிகர் பட்டாளமும் களத்தில் குதித்தது.

• சுஹாசினி, எஸ்பி.பி.யை அழகான ராட்சசன் என்று சொல்ல, எஸ்.பி.பி., 'ராட்சசன் என்பதை ஒப்புக் கொள்ளலாம். 'அழகு' கிடையாது' என்றார்.

• 'ஆங்கிலேயர்கள் நம்மை ஆட்டி வைத்தார்கள். ஆனால் இன்று ஒரு இந்தியன், - தமிழன், இங்கிலாந்தையே ஆட்டி வைத்துக் கொண்டிருக்கிறார், அவர், தம்பி ரஹ்மான் என்றார், வைரமுத்து. 'மனிதனுக்கு உப்பு, இனிப்பு, கொழுப்பு, இவை தப்பு' என்று

# ராபின்ஹூட் ரஹ்மான்!

• மேடையேற்ற பாடகர்கள்



ஹெல்த் டிப்ஸும் வழங்கினார் அவர்.

• நிகழ்ச்சியின் இறுதியில் எல்லாப பாடகர்களும் இணைந்து தேசிய கீதம் பாடக் கேட்டது உணர்ச்சிகரமான நெகிழ்வு.

- மௌலி

படங்கள் : யோகா





## பூடம்

— ஏக்நாத்

வாசிக்க ஆரம்பித்த கொஞ்ச நேரத்தில், உள்ளே இழுத்துக் கொண்டு போய், நெய் விசைத் தாத்தாவின் சைக்கிளின் பின்னால் உட்கார வைத்து கிழாம்பூர், பொட்டல்புதூர், பாப்பாங்குளம் என்று நெல்லை மாவட்ட மக்களை, வெகு நாட்கள் பழகியது போல அறிமுகிழ்த்து வைக்கும் லாவகம் எழுத்தில் இருக்கிறது. வாசித்து முடித்ததும், நமக்குத் தெரியாத ஊரில் நன்கு தெரிந்த மனிதர்களோடு வாழ்ந்து விட்டு வந்த உணர்வை ஏற்படுத்துகிறது.

காவ்யா,
14, முதல் குறுக்குத் தெரு,
டிரஸ்ட்புரம்,
கோடம்பாக்கம்,
சென்னை — 600 024.
விலை: ரூ. 60/-

## சென்னிமலைக் கிளியோபாத்ராக்கள்

— ஈரோடு தமிழன்பன்

ஹைக்கூவின் வரியளவு, பொருளமைதி, இவற்றோடு சந்தமும் சேரும்போது லிமரைக்கூ ஆகிறது. வாழ்வையும் இயற்கையையும் பற்றிக் கூறுவதைவிட, சமூக அவலங்களைக் கடுமையாக விமர்சிக்கும் லிமரைக்கூ'க்கள். ஜீன்ஸ், டி-ஷர்ட் போட்ட கோபக்கார, தமிழ் நாட்டுக் கவிதைப் பெண்கள்.

பாப்லோ பாரதி பதிப்பகம்,
ஏ - 3, லாயிட்ஸ் குடியிருப்பு,
இராயப்பேட்டை, சென்னை - 600 014.
விலை ரூ. 35/-

# புக் பேங்க்




## தமிழர் பண்பாட்டில் விளையாட்டுக்கள்

— டாக்டர் அ. பிச்சை

வீடியோ கேம்களும், இன்டர்நெட் தேடலும், கிரிக்கெட்டும் மறக்கடித்துவிட்ட தமிழர் பண்பாட்டையும், பண்பாட்டை ஒட்டி தமிழகத்தில் இருந்த விளையாட்டுக்களையும் பற்றிய நூல். இந்தப் பழந்தமிழ் விளையாட்டுக்கள் உடல், மன வலிமை பெறவும், அறிவை வளப்படுத்திக் கொள்ளவும் எத்தனை உதவின என்றும் விளக்கப்பட்டுள்ளது.

தமிழ்ப் புத்தகாலயம்,
ஜீ. 3/8 (15) மாசிலாமணி தெரு,
தி. நகர், சென்னை - 600 017.
விலை: ரூ. 30/-



## வானத்தை வசப்படுத்தும் வார்த்தைகள்

— எம். இராமலிங்கன்

'வார்த்தை வெளிவரும்வரை ஒரு முட்டாள் அறியப்படுவதில்லை' என்கிறது கீதை. அதேபோல் ஓர் அறிவாளியும் அறியப்படுவதில்லை என்பதும் உண்மைதான். வார்த்தைகளைப் பற்றிய வாதங்கள், தத்துவங்கள், சரியான நேரங்களில் சரியாகப் பிரயோகித்து சாதனைகள், படைக்கும் விதங்களைத் தெளிவாகக் கூறும் நூல்.

பூர்ணா பதிப்பகம்
8/11, எஸ், சந்திரன் காம்ப்ளெக்ஸ்,
ஹெட் குவார்ட்டர்ஸ் ரோடு,
கோவை _ 641 018.
விலை: ரூ. 70/-

— விஸ்வக்



# கிரிக்கெட் பைபிள்!




கிரிக்கெட்டிற்கென்றே இருக்கும் பத்திரிகை விஸ்டன். இந்தப் பத்திரிகைக்கு ஏகப்பட்ட வாசகர்கள். அருமையான வண்ணப் புகைப்படங்கள், வீரர்களைப் பற்றி சிறப்புத் தகவல்கள், க்விஸ், விளையாட்டு வீரர்களே எழுதும் சிறப்புக் கட்டுரைகள்... என பல சிறப்பம்சங்களைத் தாங்கி வருகிறது விஸ்டன். இதன் பதிப்பாளரும் சேர்மனுமான மானிக் தாவரை ஈ மெயில் மூலமாகத் தொடர்பு கொண்டோம்.

“கிரிக்கெட்டும் விஸ்டனும் வேறு வேறல்ல. இந்த விளையாட்டின் முன்னணி பிராண்ட் பெயரும் விஸ்டன்தான். உலகெங்கிலும் கிரிக்கெட்டிற்கு இருக்கும் வரவேற்பும், அதற்கு இருக்கும் ரசிகர்களும் வேறு விளையாட்டிற்கு உண்டா? என்பது சந்தேகமே. விஸ்டன் கிரிக்கெட் அல்மனாக் என்ற 'கிரிக்கெட் களஞ்சியம்' தான் உலகிலேயே மிகப் பிரசித்த பெற்ற புத்தகம். அது மட்டுமல்ல, ஒரு கௌரவம் மிக்க வெளியீடும் கூட! முதன் முதலில் 1864ம் வருடம் ஜான் விஸ்டன் இக் குறிப்பேட்டைப் பதிப்பித்தார். 2001ம் பதிப்பு வந்தபோது 138 வருடத்தை வெற்றிகரமாகத் தாண்டியது. 'நான் - ஃபிக்ஷன் பெஸ்ட் ஸெல்லர்' இது. கிரிக்கெட்டைப் பற்றி முழுவதுமாகத் தெரிந்து கொள்ள வேண்டுமானால், இந்த அல்மனாக்கைப் படித்தாலே போதும்” என்கிறார் மானிக் தாவர்.

“டேவிட் ஃப்ரித் என்பவர் 1979ம் வருடம் விஸ்டன் கிரிக்கெட் மன்த்லி' என்று ஆரம்பித்தார். அமோக வரவேற்பு. ஏகப்பட்ட விருதுகள் பெற்றிருக்கிறது. அல்மனாக் வெளி வந்து 138 வருடங்களுக்குப் பிறகு ஸ்பென்டா மானேஜ்மென்ட் பிரைவேட் லி., கிரிக்கெட் ரசிகர்களுக்கு 'விஸ்டன் ஏஷியா கிரிக்கெட்' என்ற மாத இதழை ஆரம்பித்திருக்கிறது. உலகிலேயே விஸ்டன் அங்கீகரித்திருக்கும் பத்திரிகையும் இது தான். கிரிக்கெட் அன்பர்களின் பைபிளும் இதுதான். மிகத் திறமை வாய்ந்த எடிட்டோரியல் எங்களுடையது. சம்பித் பல், இதன் ஆசிரியர்; பல கிரிக்கெட் வீரர்கள் மற்றும் கணிப்பாளர்கள் இதில் சிறப்புக் கட்டுரைகள் எழுதுவார்கள்...” என்கிறார் மானிக் தாவர்.

— லதா சேகர்

# அ.வெண்ணிலா

பேருந்தை விட்டு இறங்கியதும் புழுக்கம் விலகிக் கொண்டது. வெளிக்காற்று முகத்தில் பட்டது. புகையும், புழுதியுமான காற்று. கைக்குட்டையை எடுத்து முகத்தைப் பொத்திக் கொண்டாள் அஞ்சலி.

வீட்டை நோக்கி வேகமாய் நடக்கத் தொடங்கினாள். கடந்து போன நாட்களின் சந்தோஷங்களும், துக்கங்களும் உடல் மேல் படிந்து தனது நிகழ் கணத்தை இறுக்கமாக்கிவிடுமோ, என்கிற அச்சம் அவளுக்குள்.

மனம் ஒரு நிலையிலில்லை.

தன் இயல்பிற்கும், ரசனைக்கும் ஏற்ற, தானே விரும்பி அமைத்துக் கொண்ட வாழ்க்கைதான் இது. ஆனாலும், சமீப காலங்களில் ஏதாவதொரு பொழுதில் சட்டென உரசியதும் பற்றிக் கொள்கிற கோபமான வெடிப்புகளும், மன உராய்வுகளும், சச்சரவுகளும், புரிதலற்ற பரிமாற்றமும் அஞ்சலிக்குள் எப்போதும் வலித்துக் கொண்டே இருந்தன.

சட்டென பாரதியின் ஞாபகம் வந்தது. 'இந்நேரம் முழித்துக் கொண்டிருப்பானோ..!'

தொலைவிலேயே இவளைக் கண்டதும்... 'ம்ம்மா...' என கையை அகல விரித்து, தாவிக் கொண்டு வருகிற அவனின் மழலை முகம், அஞ்சலியின் எல்லாக் கவலைகளையும் ஒரு நொடியில் அழித்தெழுதி விடுகிற அதிசயம் தானே...!

சீக்கிரமே வந்துவிட்டான் சுந்தர். வழக்கமாய் மாதத்தின் முதல் வெள்ளியன்று மளிகைக் கடைக்குச் சென்று மாதாந்திர தேவைக்கான பொருட்களை வாங்கி வருவார்கள்.

சுந்தர் வந்த பத்தாவது நிமிடத்திலேயே, முகம் கழுவி, துடைத்து, டீ குடித்து, பவுடர் போட்டு...



8

# யாரிடம் சொல்வேனடி தோழி!

"என்னப்பா... ரெடியா?" என்றான்.

"என்ன கேள்வி இது...? நீங்க வந்தீங்க, உடனே ரெடியாயிட்டீங்க. நா அப்படிக் கிளம்ப முடியுமா...? பாரதிய ரெடி பண்ணணும், அப்புறமா தானே நான் கிளம்ப முடியும்..." அஞ்சலியின் குரலில் ஒலித்த சலிப்பை உணர்ந்தவனாய்...

"சரி...சரி... நா பாரதிய ரெடி பண்றேன். நீ கிளம்பு..!" என்றான்.

கிளம்பினார்கள்.

சாயந்திர நேரங்களில் வெளியே கிளம்புவது சந்தோஷமானது. அரிசி, பருப்பு, காய்கறி சமாசாரங்கள் வாங்குவதற்கென்று கிளம்பினாலும், வேடிக்கைப் பார்ப்பதற்கும், வியப்பதற்குமான சின்னச் சின்ன விஷயங்கள், இப்படியான சிறு நகரங்களிலும் இருக்கத்தான் செய்கின்றன.

வெயில் தாழ்ந்து, காற்றில் குளிர்த் தன்மை கூடி, மனிதர்களின் அன்றாட பதற்றங்கள் சற்றே குறைந்திருக்கும் நேரமிது.

முகத்தில் எண்ணெய் வழிய, கனம் குறைந்த சாப்பாட்டுக் கூடைகளுடன் தளர்ந்தும், விரைந்தும் வீடு திரும்பிக் கொண்டிருக்கும் மனிதர்கள்.

மாலை நேரத்து விற்பனைக்கென்றே டீக்கடை வாசல்களில் சூடாய் போடப் படும் எண்ணெய்ப் பலகாரங்களின் கலவையான மணம், 'ஃபாஸ்ட் புட்' கடைகளுக்கேயுரிய மசாலாநெடி.

தெருவோர தள்ளுவண்டிக் கடைகளில் பெட்ரோமாக்ஸ் விளக்கொளியில் குட்டிக் குட்டி பந்துகளைப் போல் அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் பானிபூரிகள்.

யாருடைய கவனத்தையும் கவராமல், பள்ளியொன்றின் மைதானத்தில் சிவப்புக் கிரணங்களை வீழ்த்தி, கீழே வீழ்ந்து கொண்டிருக்கும் சூரியன்.

எதிரே வருகிற தெரிந்த நபரைப் பார்த்து ஒரு கையசைத்துச் சிரித்துவிட்டு, மறுகையில் உள்ள தட்டிலிருந்து நூடுல்சையோ, சிக்கன் ரைஸ்சையோ தெருவோரக் கடையொன்றில் நின்றபடி ருசித்துச் சாப்பிட எப்படி முடிகிறது இந்த ஆண்களால்...? ஒரு பெண்ணால் இப்படி நின்று சாப்பிட முடியுமா...? அவளே விரும்பினாலும் சுற்றியிருப்பவர்கள் நிச்சயம் அந்தப் பெண்ணை எப்படியான பார்வைகளால் மதிப்பீடு செய்வார்கள்...?

யோசனை கலைந்து, டிபார்ட்மெண்ட் ஸ்டோருக்குள் நுழைந்தாள் அஞ்சலி.

"கூட்டம் ரொம்ப இருக்கு. நான் பாரதிய வச்சுக்கிட்டு இங்கேயே நிக்கிறேன்..!" என்று வாசலிலேயே நின்று விட்டான் சுந்தர்.

கூட்டத்தை விலக்கி விலக்கி, மெல்ல முன் நகர்ந்தாள் அஞ்சலி.

அவளுக்குப் பழக்கமான அந்த கடைப் பெண், இவளைப் பார்த்ததும் சிரித்தாள்.

"என்னங்க... மேடம். குட்டிப் பையன் எங்கே...?" என்றாள்.

"வெளியில அவங்க அப்பாக்கிட்டெ இருக்கான். எனக்குக் கொஞ்சம் சீக்கிரமா போடுங்க. அவன் அழறதுக்குள்ளே போகணும்!"

"சொல்லுங்க.... மேடம்..!"

இவள் சீட்டைப் பார்த்துச் சொல்லச் சொல்ல, கடைப்பெண் பொருட்களை எடுத்து அடுக்கினாள்.

வெளியே பாரதி, சுந்தரிடம் நிற்காமல், இறங்க காலால் உதைத்துக் கொண்டிருப்பது தெரிந்தது. இன்னும் கொஞ்ச நேரம் அப்படி இப்படி செய்வான். பிறகு அழத் தொடங்கி விட்டால், நிறுத்துவது சிரமம்.

சுந்தர், பாரதியை சமாதானப்படுத்தும் முயற்சியில் எதையெதையோ காட்டி சமாளித்துக் கொண்டிருந்தான்.

எல்லா நேரங்களையும், இடங்களையும் பதற்றமேற்றி விடுகின்றன குழந்தைகளின் இருப்பு.

பில் போட்டு, பொருட்களை சரி பார்த்து, அட்டைப் பெட்டியில் போட்டு,

"டைரக்டர் ஸார்! நம்ம சீரியலை எதிர்த்து கன்ஸ்யூமர் கோர்ட்லே கேஸ் போட்டிருக்காங்க."

"அடப்பாவமே, என்ன காரணத்துக்காக?"

"சீரியலைப் பார்த்தா அழுகையே வரலையாம்...!"

- நெ. இராமன்

கட்டித் தருவதற்குள் எப்படியும் கால்மணி நேரமாவது ஆகிவிடும்.

அருகேயிருந்த நாற்காலியில் உட்கார்ந்து கொண்டாள் அஞ்சலி.

பக்கத்திலிருந்த ஒருவர் சிரிப்பது போலிருந்தது இவளைப் பார்த்து. தன்னைப் பார்த்துத்தான் சிரிக்கிறாரா, அல்லது தனக்குப் பின்னால் இருப்பவரைப் பார்த்தா, என உறுதி செய்ய, திரும்பிப் பார்த்துவிட்டுத் திரும்புவதற்குள், சிரித்தவர் அங்கிருந்து நகர்ந்து விட்டிருந்தார்.

பெரிய தர்மசங்கடமான விஷயமிது. அறிமுகமானவர்கள் என்று நினைத்துக் கொண்டு சிரித்து விட்டு, அருகில் வந்த பிறகு பார்த்தால், வேறு யாராகவோ இருப்பார்கள். யாரோ என்று நினைத்து மௌனமாய் ஒதுங்கிவிட, பக்கத்தில் வந்ததும் தெரிந்த நபராக இருந்து விட்டால்... சங்கடம் தான். எல்லோரையும் பார்த்து எப்போதும் சிரித்து விடவும் முடிவதில்லையே...!

"இந்தாங்க... மேடம்... பில்...!" என கடைப்பெண் இவளிடம் பில்லைக் கொடுத்துவிட்டு,

"ஜான் அண்ணே... சீக்கிரமா பெட்டியில கட்டிக் கொடுங்க...!" என கடை ஆளை அழைத்தாள்.

பணத்தைக் கட்டிவிட்டு வெளியே வரவும், அட்டைப் பெட்டியைக் கொண்டு வந்து வண்டியில் வைக்கவும் சரியாயிருந்தது.

இரண்டாண்டுகளுக்கும் மேலாக இந்தக் கடையில்தான் பொருட்கள் வாங்குகிறாள். என்றாலும் தன்னிடம் சிநேகமாய் இருக்கும் ஒன்றிரண்டு கடைப் பெண்களின் பெயர்களைக் கூட இதுவரை தெரிந்து வைத்துக் கொள்ளவில்லை.

நிறைய நாட்கள் பார்த்திருந்து விட்டு, ஏதோ ஒரு கணத்தில் ரொம்பப் பழகியவர்கள் போல் பேசத் துவங்கி விடுகிறோம்.



பல நேரங்களில் அவர்களின் பெயரைக் கூடத் தெரிந்து கொள்ளாமல், வெறும் 'வாங்க..' 'போங்க..' என்கிற மரியாதையான வார்த்தைகளோடு பேசிக் கொண்டு விலக முடிகிறது.

சுந்தரிடமிருந்து பாரதியை வாங்கிக் கொண்டாள் அஞ்சலி.

வண்டியை எடுக்க சுந்தர் திரும்ப....

"அய்யோ...." பெருங்குரலெடுத்து கத்தினாள் அஞ்சலி. பதறிப் போனான் சுந்தர்.

'பாரதி கீழே விழுந்து விட்டானோ...!' வேகமாய்த் திரும்பினான்.

பாரதியைத் தூக்கிக் கொண்டு ஓடினாள் அஞ்சலி. வேகமாய் அவளைக் கடந்து போக வந்த டி.வி.எஸ்.50யை மறித்தாள்.

"ஏய்... நிறுத்து வண்டியை!" என்றாள் கோபமாய்.

பெருஞ்சிரிப்போடு வந்து கொண்டிருந்த இரண்டு இளைஞர்களும் மெல்ல அதிர்ந்தார்கள்.

"என்ன இது...? நீ பாட்டுக்கு நிக்கிற வண்டிய காலால எட்டி உதைச்சிக்கிட்டு வர்றே. யார் மேலயாவது விழுந்தா என்னாகிறது...?" என்றாள் முகம் சிவக்க.

"நாங்களா தள்ளினோம்.... அதுவா விழுந்தது...!" வாயில் ஏதோவொன்றை மென்றபடியே ஓர் இளைஞன் சொன்னான்.

"பொய் பேசாதே. நான் தான் நீ காலால எட்டி உதைச்சதைப் பார்த்தேனே. ஒன்றுமே தெரியாத மாதிரி சிரிச்சுக்கிட்டு வர்ற. மொதல்ல வண்டிய நிறுத்திட்டுப் போயி, அந்த வண்டியத் தூக்கி நிறுத்திட்டு வா...!" அதட்டலும், உறுதியுமாய் வார்த்தைகள் வெளி வந்தன அஞ்சலியிடமிருந்து.

சின்னதாய்க் கூட்டம் கூடி விட்டது. கூட்டத்தை விலக்கிவிட்டு உள்ளே வந்த சுந்தர், பாரதியை முதலில் வாங்கிக் கொண்டான்.

"என்ன அஞ்சலி...?" என்றான் பதற்றம் குறையாதவனாய்.

"நான் கடைவாசல்ல நின்னு பார்த்துக்கிட்டு இருக்கேன். இதோ... இந்த ரெண்டு பேரும் அங்க நிக்கிற வண்டியை உதைச்சுத் தள்ளிட்டு, சிரிச்சுக்கிட்டு வர்றாங்க. கேட்டா, திமிராப் பேசுறாங்க....!" படபடவெனப் பொறிந்தாள் அஞ்சலி.

"ஏம்ப்பா... அந்தப் பொண்ணுதான் பார்த்திருக்கே... பேசாம வண்டியத் தூக்கி வச்சிட்டுப் போ...!" கூட்டத்தில் ஒருவர் சொல்ல,

"என்ன மொறைக்கிறே? சொல்றம்ல... போடா... போயி தூக்கி வையி...!" பெரியவர் ஒருவர் அதட்டவும், பல்லைக் கடித்தபடி டி.வி.எஸ்.50_ஐ ஸ்டாண்ட் போட்டு நிறுத்தி விட்டு, விழுந்து கிடந்த வண்டியைத் தூக்கி நிறுத்த இரு இளைஞர்களும் போனார்கள்.

"சரி... நீ போம்மா. நாங்க பாத்துக்கிறோம்..." டிபார்ட்மெண்ட் ஸ்டோரின் உரிமையாளர் சமாதானப்படுத்தி இவர்களை அனுப்பிட முனைந்தார்.

அஞ்சலியின் கையைப் பிடித்து வெளியே இழுத்துக் கொண்டு வந்தான் சுந்தர்.

அஞ்சலிக்கு வியர்த்திருந்தது.

பாரதியின் உடம்பும் நனைந்திருந்தது.

பாரதியை, அஞ்சலியின் கையில் கொடுத்து விட்டு, வண்டியைக் கிளப்பினான் சுந்தர்.

'குப்'பென புகை கிளம்பிற்று.

சிரிக்கச் சிரிக்க பேசிக் கொண்டே வந்தவர்களின் முகங்கள் இப்போது மௌனம் பூசி, வெளிறிப் போயிருந்தது.

சென்றபோது பார்த்து ரசித்தபடியே வந்த காட்சிகள், திரும்பும் போது ஏனோ மனதில் ஒட்டாமல் விலகிப் போயின.

வழக்கத்தை விட வண்டியை வேகமாய் ஓட்டினான் சுந்தர்.

"என்னப்பா..?" என்றாள் அஞ்சலி.

"ஒண்ணுமில்ல...!" என்றான்.

"நா ஏதாவது தப்பா நடந்துகிட்டேனா...!" அஞ்சலி கேட்க,

"இப்ப நீ வாயை மூடிக்கிட்டு பேசாம வா...!" என்றான் ஒற்றை வரியில்.

வேகமாய் வேகத்தடை மீது ஏறி, குலுங்கியது வண்டி.. கம்பியை இறுகப் பிடித்தாள் அஞ்சலி.

(தொடரும்)



# குல்லு மல்லு

—கதிர்



இப்பதா வந்த, அதுக்குள்ள கிளம்பிட்ட...?
இன்னைக்கு "இன்டியா மேச்" இருக்குபா.




வர வர "கிரிக்கெட்" பாக்கறது "ஃபேஷனா" போச்சு.
அதுல இருக்கற இன்ட்ரஸ்டே தனி.




இதே மாதிரி தான் நேத்து ஒரு பிச்சைக்காரன் வந்து தலைய சொறிஞ்சான்... சரின்னு பர்ஸ எடுத்தா ஸ்கோர் கேக்கறான்.




அதான்பா "கிரிக்கெட்."
சும்மா சொல்லக் கூடாது, நம்ம பிளேயர்ஸ் விளம்பரம்னு வந்துட்டா நல்லா ஆடிக்காட்டுவாங்க, 'மேட்ச்'ன்னு வந்துட்டா நல்லா நடிச்சுக் காட்டு வாங்க.




இண்டியன் டீம் என் வாழ்க்கையிலே புகுந்து விளையாடுது.
விட்டா நீ ஓவருக்கு எட்டு பால் போடுவ, நான் கிளம்பறேன்.




சும்மா... ஒரு விளம்பரத்துக்கு....

Machines approved by
FDA & European
Economy Council

Health and
Beauty Clinic




Hair Scanning &
Consulting **Free**

பொடுகா? வழுக்கையா? முடி உதிர்தலா?
புழுவெட்டா? இந்தியாவிலேயே முதன்முறையாக!

★ உடல் எடையைக் குறைக்க... ★ வேண்டாத ரோமங்களை நீக்க...
★ மார்பகத்தை பெரிதாக்க, சிறிதாக்க... ★ அறுவை சிகிச்சையின்றி முகச்சுருக்கம் போக்க...
★ Acne, பரு, மங்கு மற்றும் மருநீக்க... ★ முகக்கருப்பை போக்க... ★ முகத்தை பொலிவாக்க...
★ ஹைடெக் ஃபேஷியல்ஸ்... ★ பெர்மனென்ட் மேக்கப்

## பொடுகு பிரச்சினையா? புழுவெட்டா?

கவலை வேண்டாம்! இந்தியாவிலேயே முதன்முறையாக Hair Scannerரால் பொடுகின் அளவைப்பார்த்து Imported Machines மற்றும் மூலிகைகளினால்பொடுகிற்கு நிரந்தர தீர்வு அளிக்கப்படுகிறது.

## முடி வளரவேண்டுமா?

முடி உதிர்தலினால் வழுக்கையாகி விடுமோ என்ற பயம் வேண்டாம். எங்களின் மருத்துவர்கள் முடி சாம்பிள்ஸ் எடுத்து டெஸ்டிங் செய்து மயிர்க்கால்களை (Hair Follicle) வலுப்படுத்தும் Root Stimulation என்ற சிகிச்சையினால் முடி கால்களை வலுப்படுத்தி எந்தவிதமான முடி உதிர்தல் பிரச்சினைக்கும் தீர்வு அளிக்கப்படுகிறது.



## உடல் எடையைக் குறைக்க

ஐரோப்பாவின் அதி நவீன கருவிகளைக் கொண்டு, Diet மற்றும் Side Effects அற்ற FDA-வால் அங்கீகரிக்கப்பட்ட உடல் எடையைக் குறைக்கும் சிகிச்சை அளிக்கப்படுகிறது.


Before


After


Before


After

## முடி பிரச்சினைகளுக்கு

**Australian Trichology System மூலம் நிரந்தர தீர்வு**

Trichology-ன் மூலம் முடியில் உள்ள மூலப் பிரச்சினையை ஆராய்ந்து, நிரந்தர தீர்வு நவீன முறையில் அளிக்கப்படும்.

**AMERICAN HAIR BONDING & WEAVING SYSTEMS**

வழுக்கை தலை உள்ளவர்களுக்கு Bonding & Weaving முறைகள் மூலம் நிரந்தர தீர்வு.

நிறுவனர் திருமதி **Praba Reddy**
(Member in British Association of Beauty Therapy and Cosmetology)
**D.T.E., B.T.H.D., M.A., M.S., Dip. in Bridal Dressing (Singapore)**
**Cinema Secrets Hollywood Makeup (London) World Dip. in Hair Colouring (Paris)**

**Chennai Clinic :**
#15, new giri road, g.n. chetty road, (near apollo cliniq), t.nagar, chennai - 17.
ph : 28260064, cell : 98412 77688, 98423 33777 email : carolinpraba@yahoo.com

**Head Office:**
**PRABA'S HERBAL BEAUTY CLINIC**
116, Bussy Street, Pondicherry - 1.
Ph : 0413-2348920, 21, Cell : 98423 33777



ஆண், பெண் இருபாலருக்கும்
Govt. recognised Beautician Course
சிறந்த முறையில் அளிக்கப்படும்.

ஆண், பெண்
இருபாலருக்கும் பிரத்யேக
BEAUTY PARLOUR வசதி உண்டு